


# பானி மிக்ஸ் சாக்லேட்

## சுவையான காலை உணவிற்கு ஒரு வழி.

உங்கள் குழந்தை விரும்பி உண்ணும் பானி மிக்ஸ் சாக்லேட்டை காலை உணவிற்கு கொடுங்கள். இது தானியங்கள், பழங்கள் முந்திரியோடு சாக்லெட்டும் கலந்த பாரிட்ஜ்.




**எளிதில் தயாரிக்கலாம்**
சமைக்கத் தேவையில்லை. ஒரு கிண்ணத்தில் தேவையான அளவு பானி மிக்ஸை போடவும். முன்னமே கொதிக்க வைத்த பாலைச் சேர்க்கவும். மிருதுவான பாரிட்ஜ் கிடைக்க மெதுவாக கலக்கவும்.



**பானி மிக்ஸ்**®

உடனடியாக தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்
இரு வகைகளில்:
நாச்சுரல் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/C/1/89/TAM

தமிழ்நாடு காங்கிரஸ், தன் பிடியில்தான் இருக்கிறது என்பதை 'கப்பு விவகாரத்தில்' மீண்டும் நிரூபித்திருக்கிறார் ஜெயலலிதா. இந்த விவகாரத்தின் காரணமாகவும், மதுரையில் நடந்த கோஷ்டி மோதலின் தொடர்பாகவும், வாழப்பாடியார் - மூப்பனார் குழு மோதல் உச்சகட்டத்திற்குச் சென்றிருக்கிறது. திருப்பதி மாநாடு நெருங்க நெருங்க இன்னமும் விறுவிறுப்பான காட்சிகளை எதிர்பார்க்கலாம்.

'நக்கீரன்' பத்திரிகையில் 'இங்கே ஒரு ஹிட்லர்' என்ற கட்டுரைத் தொடர் ஆரம்பிக்கும் போது, 'இதன் மூலமாகத்தான் காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்படும்' என்று கப்பு நினைத்திருக்கக் கூட மாட்டார். கட்டுரைகளால் (குறிப்பாகத் தலைப்பால்) மிகவும் பாதிக்கப்பட்ட முதல்வர் மிகத் தெளிவாகவே, ''இந்தக் கட்டுரை தொடர்ந்து எழுதப்பட்டால் அ. தி. மு. க. - காங்கிரஸ் உறவு பாதிக்கப்படும்' என்று சொல்லி விட்டார்.

''அந்தக் கட்டுரைகள் நியாயமான விமர்சனக் கட்டுரைகள்தான். சட்டமன்றத்தில், எதிர்க்கட்சிகளைப் பேச விடாமல் தடுப்பது, பீர் தொழிற்சாலை விற்ற விவகாரம், டான்ஸி தொழிற்சாலை தாரை வார்க்கப்பட்டது போன்ற விஷயங்கள்தான் அதில் விளக்கப்பட்டிருந்தன. தனிநபர் தாக்குதலோ, அவதூறோ அந்தக் கட்டுரைகளில் இல்லை. எங்கள் கைகள் (வாய்கள்?) கட்டப்பட்ட நிலையில், குறைந்தபட்சம் கப்புவாவது, விமர்சனம் செய்கிறாரே என்று சந்தோஷப்பட்டோம். ஆனால் அதையும் தாங்க முடியாமல் முதல்வர் இந்த விவகாரத்தில் மூக்கை நுழைத்திருக்கிறார். இப்போதுள்ள சூழ்நிலையில் நாங்கள் எதுவும் பேச முடியாது'' என்றார் நடுநிலையுடன் செயல்படும் காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

கப்புவின் கட்டுரைகள் நியாயமான விமர்சனக் கட்டுரைகள் என்றாலும்,

# த்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டுச் சட்டம் வருமா?

☛ கப்பு



☛ நக்கீரன் பிரதிகள் எரிக்கப்படுகின்றன



'இங்கே ஒரு ஹிட்லர்' என்ற தலைப்பை வைத்தது பத்திரிகைதானாம். 'இதில் ஒன்றும் தவறில்லை' என்கிறார் நக்கீரன் நிர்வாக ஆசிரியர் கோபால்.

''ஜெயலலிதாவை ஜான்சி ராணி (இப்போது கலைஞர் 'டான்சி ராணி' என்று கிண்டல் செய்கிறார்) என்றும், ஜோன் ஆப் ஆர்க் என்றும் ஆதிபராசக்தி என்றும் வர்ணிக்கிறார்களே. அப்படியென்றால் அதற்கான தகுதிகள் ஜெ. வுக்கு உண்டா? ஜெ.யின் சர்வாதிகாரத் தன்மையைக் குறியீடாக (symbolic) விளக்கத்தான் அந்தத் தலைப்பை வைத்திருக் கிறோம்'' என்கிறார் அவர்.

தற்போது மூப்பனார் குழுவில் இருக்கும் கப்புவுக்காகக் கண்ணீர் விட அந்தக் குழுவில் யாரும் தயாராக இல்லை. ''அவர் ஒரு சந்தர்ப்பவாதி'' என்றார் மூப்பனார் அணிப் பிரமுகர் ஒருவர்.

''வரலாறு காணாத கொடுமைகளைச் செய்தவன் ஹிட்லர். லட்சக்கணக்கான யூதர்கள் மடியக் காரணமாக இருந்தவன்; பல நகரங்களை அழித்தவன். Concentration Camp, Gas Chamber வைத்து மக்களைக் கொடுமைப்படுத்தியவன். அப்படிப்பட்டவனுடன் முதல்வரை - அதுவும் பெண் முதல்வரை - ஒப்பிட்டு எழுதுவது என்பது சிறிதும் சரியல்ல. சர்வாதிகாரி, கொடுங்கோல் முதல்வர் என்றெல்லாம் கூடச் சொல்லலாம். ஹிட்லர் என்பது மிகவும் அதிகபட்சம். முதல்வர் மனம் புண்பட்டது சரிதான்'' என்றார் வாழப்பாடி கோஷ்டி எம். எல். ஏ. ஒருவர்.

கப்பு விவகாரத்தில் சட்டமன்றத்தில் உள்ள இரு காங்கிரஸ் கோஷ்டிகளும் மிகவும் பவ்யமாக ஜெ. சொல்வதைக் கேட்டுச் செயல்பட்டிருக்கிறார்கள். இத்தனைக்கும் மூப்பனார் அணியைச் சேர்ந்த சட்டமன்ற காங்கிரஸ் தலைவர் எஸ். ஆர். பி. கப்புவுக்கு மிகவும் வேண்டியவர்.

''இந்த விவகாரத்தில் இவர்கள் ஒன்றுபடுவதைத் தவிர வேறு வழியில்லை. புரட்சித் தலைவி விருப்பத்தை இவர்கள் நிறைவேற்றாவிட்டால், காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களின் சிபாரிசுகள் எதுவும் அரசாங்கத்தில் எடுபடாது என்பது மட்டுமல்ல, மத்திய அரசுக்கும் நாடாளுமன்றத்தில் ஆதரவு நீடிக்காமல் போகலாம். இதைப் புரிந்து கொண்டு செயல்பட்டிருக்கிறார்கள்'' என்று கூறிச் சிரித்தார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

இதற்கிடையில் தம்மை வெளியேற்ற வாழப்பாடியாருக்கு அதிகாரம் கிடையாது என்று அறிக்கை விட்டிருக்கிறார் கப்பு. கொள்கைப் பரப்புச் செயலாளர் பொறுப்பில் தாம் இருப்பதால், அகில இந்திய காங்கிரஸ் தலைமைதான் வெளியேற்ற முடியும் என்பது அவருடைய வாதம். கப்புவின் கட்டுரைகளின் விளைவாகவும், முதல்வரின் கோபம் காரணமாகவும் உந்தப்பட்ட அ. தி. மு. க. வினர் தமிழகத்தின் பல இடங்களில் நக்கீரன் பிரதிகளை ஆயிரக்கணக்கில் எரித்திருக்கிறார்கள். ஏஜெண்டுகள், நிருபர்கள் கடத்தப்பட்டிருக்கிறார்கள். போலீஸார் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

''எங்கள் எழுத்துக்களும், விமர்சனங்களும் அவதூறாக இருந்தால் பரிகாரம் காண, பிரஸ்கவுன்ஸில், கோர்ட் என்று இருக்கிறது. அவைகளை விட்டு விட்டு, வன்முறையிலும் அடக்குமுறையிலும் இறங்குவது எப்படிச் சரியாகும். பத்திரிகைகள்தான் எதிர்க்கட்சிகளாகச் செயல்பட வேண்டும் என்று ஆட்சிக்கு வந்த புதிதில் சொன்ன முதல்வர், இப்படி நடக்க அனுமதிப்பது சரியா என்று கேட்கிறார் ஆசிரியர் கோபால்.

ஆனால் இதையே வேறு ஒரு கண்ணோட்டத்தில் பார்க்கிறார் இன்னொரு பத்திரிகை ஆசிரியர். ''பிரஸ் கவுன்ஸில், கோர்ட் என்று போனால், முடிவுகள் வெளிவரத் தாமதம் ஆவது ஒரு பக்கம் இருக்க, சம்பந்தப்பட்ட பத்திரிகைக்கு 'பாப்புலாரிடி' ஏறிக் கொண்டே போகிறது. அதனால் இதுபோன்ற விஷயங்களைப் பெருமையாக நினைக்கிறார்கள். சில பத்திரிகை ஆசிரியர்கள் சிறைக்குச் செல்வதற்கும் தயாராக இருக்கிறார்கள். அவமானமாகக் கருதுவதில்லை. 'தியாகி' யாகி விடுவார்கள்! கோர்ட்டுக்குச் சென்றால் 'குறுக்கு விசாரணை' செய்கிறோம் என்ற சாக்கில் சம்பந்தப்பட்ட அரசியல்வாதியை கோர்ட்டுக்கு இழுத்துக் கேள்விகளால் குடைந்தெடுத்துக் கஷ்டப்படுத்துவார்கள். இதனால் கோர்ட்டுக்குப் போவதற்கு யோசிக்கிறார்கள் அரசியல்வாதிகள். இந்த நிலைகளால்தான் ஆட்சியிலிருக்கும் அரசியல்வாதிகள், பத்திரிகைகளை முடக்க அல்லது வழிக்குக் கொண்டு வர வேறு வழிகளைக் கையாள நினைக்கிறார்கள்'' என்றார் அவர்.

'நக்கீரன்' மீது ஒரு கோடி ரூபாய் மான நஷ்ட வழக்குப் போட்ட முதல்வர், அந்த வழக்கைத் துரிதப்படுத்தாமல் கிடப்பில் போட அனுமதித்திருப்பது இதற்கு நல்ல எடுத்துக்காட்டு.

ஆனால் கோபால் இதை மறுக்கிறார். ''எங்களிடம் ஆதாரங்கள் இருக்கின்றன. கோர்ட்டுக்கு வந்தால் அவர் மாட்டிக் கொள்வார்'' என்கிறார் அவர்.




இந்தச் சூழ்நிலையில் அவதூறாக எழுதும் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்தும் நோக்கில் சட்டம் ஒன்றை இந்தக் கூட்டத் தொடருக்குள் கொண்டு வருவதற்கான முயற்சிகளில் ஜெ. அரசு இறங்கியிருக்கிறது என்று கோட்டை வட்டாரத்துச் செய்திகள் கூறுகின்றன. சமீபத்தில் முதல்வர் சட்ட மன்றத்தில் பேசும் போது கூட கோடி காட்டியிருக்கிறார். இ த னை உடனே எதிர்த்தும் கண்டித்தும் தேசிய நாளிதழான ஹிந்துஸ்தான் டைம்ஸ் மிகக் கடுமையான தலையங்கம் எழுதியுள்ளது. முதல்வரின் நோக்கம் அவதூறுகளைக் கட்டுப்படுத்து வதுதான் என்றால், இருக்கின்ற சட்டங் களே போதும் என்பதை அவர் புரிந்து கொள்ள வேண்டும். அதிக அதிகாரங் களைக் கையில் எடுத்துக் கொள்வது அரசுக்கே ஆபத்தாக முடியும். மேலும், அவதூறாக எழுதுவது, மற்றும் நியாயமாக எழுதுவது என்ற இரண்டு விஷயங்களுக் கிடையே உள்ள கோடு மிகவும் மெலி தானது. இந்தச் சட்டம் வருமானால் நியாய மாக எழுதுபவர்கள் கூட அதிகார துஷ்பிர யோகத்தால் பாதிக்கப்படுவார்கள்.

இந்திரா காந்தி, எம். ஜி. ஆர்., ராஜீவ் காந்தி ஆகியோர் பத்திரிகைகளை கட்டுப் படுத்தும் நோக்கத்தில் கறுப்புச் சட்டங் களைக் கொண்டு வந்த போது பலத்த எதிர்ப்பைச் சந்தித்தார்கள். பின்னர், அந்தச் சட்டங்களும் வா ப ஸ் பெறப்பட்டன. இதையெல்லாம் உணர்ந்து முதல்வர் செயல்படுவது அவருக்கும் நல்லது; தமிழ கத்துக்கும் நல்லது.

– ப்ரியன்

அபிப்பிராய வாக்கெடுப்புக்களைப் பொய்யாக்கிக் கொண்டு, ஜான் மேஜர் பிரிட்டிஷ் பிரதமராகி விட்டார். வெற்றி - தோல்வி ஒருபுறமிருக்க, இந்தத் தேர்தல் நடந்த முறையும் பொதுவாக பிரிட்டிஷ் ஜனநாயக அமைப்பும் நம் கவனத்துக்கு உரியன.

☛ மேஜர்



# பிரிட்டனில் தேர்தல் எப்படி நடந்தது?

☛ வேட்பாளரின் அன்பான விசாரணை



நமது ஜனநாயகம், பிரிட்டிஷ் ஜனநாயக முறையின் அடிப்படையில்தான் உருவானது என்றாலும் ஒரு முக்கிய வித்தியாசம், பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எழுதப்பட்ட அரசியல் சாசனச் சட்டம் என்பதாக ஒன்று கிடையாது. தொடர்ந்து வரும் மரபுகளே அனைவராலும் மதிக்கப்படுகின்றன. அதனால் எழுதப்படாத அரசியல் சாசனம் அதிக மாற்றங்கள் இன்றிப் பாதுகாக்கப்படுகிறது. நமது தேசத்திலோ எழுதப்பட்ட சாசனம் அடிக்கடி திருத்தத்துக்கு உள்ளாகி, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் திகழ்கிறது!

இப்போது நடந்த தேர்தல் அறுநூற்றைம்பது எம்.பி.க்கள் கொண்ட பிரிட்டிஷ் நாடாளுமன்றத்துக்கு,



☛ கின்னாக்

பிரிட்டிஷ் அரசிக்குச் செல்வமும் செல்வாக்கும் அதிகம். அதிகாரபூர்வ தலைவர் அவரே. ஆனால் அதிகாரங்கள் குறைவு. அமைச்சரவையின் ஆலோசனைப்படிதான் அவர் நடக்க வேண்டும். நமது ஜனாதிபதி போலத்தான்.

லிபரல் கட்சியும் வேறு பல உதிரிக் கட்சிகளும் உண்டு என்றாலும், பிரதான கட்சிகள், கன்சர்வேடிவ் லேபர் கட்சிகளே.




அபிமான வேட்பாளருக்கு ஆதரவு கோஷங்கள்

மார்கரெட் தாட்சர் காலத்தில் கன்ஸர்வேடிவ் கட்சிக்கு இருந்த செல்வாக்கு, பிரதமர் மேஜர் தலைமையில் சரிந்து, மறுபடி குவெய்த் விடுதலைப் போரின் போது உயர்ந்து, பின்னர் மீண்டும் சரியத் தொடங்கியது. காரணம், தொழில் துறையில் மந்த நிலை, வேலை இல்லாத் திண்டாட்டம், விலைவாசி உயர்வு. ஆனாலும் மேஜர் நம்பிக்கையோடு பேசினார். பல இடங்களில் பலத்த எதிர்ப்பையும் சந்தித்தார். அழுகிய முட்டைகள் கூட வீசப்பட்டன, ஓரிடத்தில்! பொறுமை காத்துப் பிரசாரத்தைத் தொடர்ந்தார்.

தொழிற் கட்சித் தலைவர் நீல் கின்னாக் இருபது சீட் மெஜாரிடியுடன் தமது கட்சி பதவிக்கு வரும் என்று வீரமாகப் பேசிய போதிலும், தேர்தல் நெருங்க நெருங்கச் சுருதி மாறினார்! 'இரு கட்சிகளுக்குமே அறுதிப் பெரும்பான்மை கிடைக்காத பட்சத்தில் - மறுதேர்தலை உடனே சந்திக்க முடியாது என்பதால் - புதிய பிரதமரை பல கட்சியினரும் சேர்ந்து ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து ஏகமனதாக (மனச் சாட்சிப்படி!) தேர்ந்தெடுக்கலாம்' என்று கூடக் கருத்துக் கூறப்பட்டது. ''அப்படியென்றால் அத்தகைய பிரதமராக விளங்கவும் நான் தயார்'' என்று முந்திக் கொண்டார் கின்னாக்!

தொழிற்கட்சி பிரசாரத்தில், அனைவருக்கும் தேசிய ஆரோக்கியத் திட்டம், பென்ஷன், வீட்டுவசதி என்று சில சோஷலிஸ பாணி கோஷங்கள் மேலோங்கியிருந்த போதிலும் 'சோஷலிஸம்' என்ற வார்த்தையே பயன்படுத்தப்படவில்லை! பல கொள்கைகள் தலைகீழாக மாறி விட்டதையும் காண முடிந்தது. ஒருதலைப் பட்சமான அணு ஆயுத ஒழிப்பு, ஒட்டு மொத்த தொழில் துறை தேசியமாக்கல் போன்ற கருத்துக்களுக்குக் 'குட் பை' கூறப்பட்டது. கலப்புப் பொருளாதாரத்தைத் தொழிற்கட்சி ஏற்றுக் கொண்டது. ''தனியார் முதலீடு விஷயத்தில் மாற்றமில்லை; பங்கு மார்க்கெட் பயப்பட வேண்டாம்; பவுண்டின் மதிப்பைக் குறைக்க மாட்டோம்'' என்றார் கின்னாக், உலகெங்கும் ஏற்பட்டு வரும் மாற்றங்களுக்கு அனுசரணையாக.

''கன்ஸர்வேடிவ் கட்சிக் கொள்கைகளைக் காப்பி அடிக்கிறார்கள்; இவர்களுக்குச் சொந்தக் கருத்து கிடையாது'' என்று முழங்கினார் மேஜர்! வாக்குகளைப் பெற, வருமான வரிச் சலுகைகளை அறிவித்தார்.

பிரிட்டிஷ் தேர்தல் முறை சுவாரசியமானது என்பதற்கு இன்னும் சில சாம்பிள்கள் :




பிரசார உத்திகள் பலவற்றுள் ஒன்று

● ஒவ்வொரு வேட்பாளரும் 4144 பவுண்ட்தான் தேர்தலுக்காகச் செலவழிக்கலாம். (இது தவிர மக்கள் ஜனத்தொகை மிகுந்த நகர, கிராமப் பகுதிகளில், அங்கு வசிக்கும் மக்கள் எண்ணிக்கையைப் பொறுத்து தலைக்கு இத்தனை பென்ஸ் என்று கணக்கிட்டுச் செலவழிக்கலாம்) மோசடி வேலைகள் செய்ததாகக் கண்டு பிடிக்கப்பட்டால் மறு தேர்தல்தான்!

● தேசியக் கட்சிகள், பிரசாரத்துக்குச் செய்யும் செலவுகளுக்கு வரம்பு ஏதும் கிடையாது. வேட்பாளர், எல்லா வீடுகளுக்கும் ஒருமுறை தபால் மூலம் இலவசமாகத் தேர்தல் அறிக்கை கொண்ட பேர்களை அச்சடித்து அனுப்பலாம். ஆனால் பணம் கொடுத்து, ரேடியோவிலோ, டீவியிலோ பிரசாரம் செய்ய முடியாது.

● தேர்தல் முடிந்து 35 நாட்களுக்குள் வேட்பாளர் கணக்கு வழக்குகளைச் சமர்ப்பித்து விட வேண்டும்.

● பிரசாரத்துக்காக, அரசுக்குச் சொந்தமான பள்ளிக்கூட ஹால்கள், டவுன் ஹால்கள் இவற்றை இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

● டீ.வி.யிலும் ரேடியோவிலும் செய்யப்படும் செய்தி விமர்சனங்கள் பாரபட்சமின்றி இருக்க வேண்டும்.

● டீவி, ரேடியோ நிலையங்களில் இருதரப்பையும் சேர்ந்த வேட்பாளர்களைப் பேசச் சொல்லி, அதைக் கேட்க, பொது மக்களையும் அழைப்பார்கள். இதில் பொது மக்கள் வேட்பாளரிடம் கேள்விகளும் கேட்கலாம்!

● முக்கிய கட்சிகள், தேசிய ஒலிபரப்பில் பங்கு கொண்டு பிரசாரம் செய்யலாம். அவை நிற்க வைக்கும் வேட்பாளர்களையும், மக்கள் சபையில் தேர்தலுக்கு முன் கட்சிகளுக்கு இருந்த உறுப்பினர்களின் எண்ணிக்கையையும் பொறுத்து நேரம் ஒதுக்கப்படும்.

● போஸ்டர்கள் அடித்து ஒட்டலாம்; பத்திரிகைகளில் விளம்பரம் செய்யலாம்; இதற்காக விளம்பர ஏஜென்சிகளையும் நாடலாம்; தப்பில்லை.

● அந்தந்தத் தொகுதியில் வேட்பாளரின் புகைப்படத்தோடு அவரைப் பற்றிய தகவல்களையும் அச்சிட்டு விநியோகிக்கலாம். (நம்மூர் மாதிரி முன்னாள் இன்னாள்

## வாசலில் ஒரு புல்!



சத்யஜித் ரேக்கு அப்போது வயது ஏழு. தாயாருடன் தாகூரின் சாந்தி நிகேதனுக்குச் சென்றிருந்தான். தாகூரிடம் ஆட்டோ கிராப் வாங்க ஒரு சிறு நோட்டுப் புத்தகத்தையும் கொண்டு சென்றிருந்தான். சத்யஜித்தின் தாயார், "என் மகன் உங்கள் கவிதை வரிகள் சிலவற்றை இந்த நோட்டுப் புத்தகத்தில் பதிவு செய்து வைத்துக் கொள்ள விரும்புகிறான்" என்று சொல்ல, தாகூர் நோட்டை வாங்கிக் கொண்டார். மறுநாள் சத்யஜித்திடம் அதைத் திருப்பித் தரும் போது, தாகூர் தாம் அதில் எழுதியிருந்த கவிதை வரிகளைப் படித்துக் காண்பித்து விட்டு, "இந்தக் கவிதை வரிகள் உனக்கு இப்போது புரியாமல் போகலாம். ஆனால் நீ வளர வளர இந்த வரிகள் ரொம்ப அர்த்தமுள்ளதாக விளங்கும்" என்று கூறினார்.



அந்த வரிகள் பின் வருமாறு :

"நான் உலகம் முழுவதும் சுற்றி
ஆறுகளையும் மலைகளையும் பார்த்து வந்தேன்.
இதற்காக நிறையப் பணம் செல வழித்தேன்
நீண்ட தூரங்கள் சென்று
எல்லா வற்றையும் பார்த்தேன்.
ஆனால் என் வாயிற்படிக்கு அருகே
ஒரு சிறு புல்லின் நுனியிலிருக்கும்
பனித் துளி ஒன்றில்
என்னைச் சுற்றியிருக்கும்
மொத்தப் பிரபஞ்சமும் தெரிவதைக்
காண மறந்தேன்."

'ரே - சினிமாவும், கலையும்' புத்தகத்திலிருந்து : இரா. இருபதி

## உடன்பிறப்பே சூப் சாப்பிட்டுப் போ!

கும்பகோணம் புதிய பேருந்து நிலையத்தில் ஒருவர் சூப் விற்கிறார். அவர் புதுமையான முறையில் குரல் கொடுத்து மக்களைக் கவர்கிறார் :

"தலைவா சூப் சாப்பிட்டுப் போ!"

"உடன் பிறப்பே சூப் சாப்பிடு!"

"ரத்தத்தின் ரத்தமே உனக்கு சூப் வேண்டாமா?"

"சூப்பர் ஸ்டார் தம்பிகளா சூப் ருசி பாருங்க வாங்க!"

"தாய்க் குலமே சூப் சாப்பிடுங்கம்மா, நல்லா இருக்கும்!"

என்று பலவிதமான குரல்களில் அழைக்க, சூப் வியாபாரம் சூப்பராக நடக்கிறது!

- கரிச்சான் குஞ்சு தாசன்

தலைவர்கள் படங்களையெல்லாம் அச்சிட முடியாது!)

● மக்களவைத் தேர்தலில் காலை ஏழு மணி முதல் இரவு பத்து மணி வரை வோட்டுப் போடலாம். இடைவேளை எதுவும் கிடையாது. ஒவ்வொரு முறையும் தேர்தல் வியாழக்கிழமையில்தான் நடக்க வேண்டும் என்று ஒரு மரபு!

● சட்டப்படி அரசியல் கட்சிகள் தங்கள் கணக்கை வெளியிட வேண்டும் என்ற கட்டாயமில்லை. ஆனாலும் சில கட்சிகள் கணக்கை வெளியிடுகின்றன, பொது மக்களின் கவனத்துக்காக. தொழில் நிறுவனங்கள் 200 பவுண்டுக்கு மேல் எந்த அரசியல் கட்சிக்காவது நன்கொடை கொடுத்திருந்தால் அதைக் கண்டிப்பாக வெளியிடத்தான் வேண்டும்!

இந்தத் தேர்தலில் இந்தியர்கள் (அங்கே வசிக்கிறவர்கள்தான்!) போட்டி யிட்டார்கள் என்பது இன்னும் சுவாரசிய மான விஷயம். இந்தியர்கள் மட்டுமின்றி பாகிஸ்தானிய வேட்பாளர்களும் உண்டு. ஒரே கட்சியைச் சேர்ந்த இவர்கள் காஷ்மீர் பிரச்னை பற்றி இருவேறு விதமாகப் பேசுவார்கள். அதனாலும் இந்தியர்களின் வோட்டுக்கள் ஏராளமாக இருப்பதாலும் காஷ்மீர் பற்றிய தமது கட்சிக் கொள்கை யைத் திட்டவட்டமாக அறிவித்தார் மேஜர். காஷ்மீரில் பயங்கரவாதிகளின் ஊடுருவ லுக்கு பாகிஸ்தான் ஆதரவு அளிப்பதை வழவழாப் பண்ணாமல் வன்மையாகக் கண்டித்தார். ''சிம்லா ஒப்பந்த அடிப்படை யில் இரு நாடுகளும் காஷ்மீர் பிரச்னை யைச் சுமுகமாகப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும்'' என்று கருத்துத் தெரிவித்தார்.

முழுக்க முழுக்க வெள்ளையர்களே நிறைந்த தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக் கப்பட்டு, காமன்ஸ் சபையில் நுழைந்த முதல் ஆசியர் என்ற பெருமை பெற்ற பஞ்சாபிக்காரர் டாக்டர் அசோக் குமார். இவர் தொழிற்கட்சிக்காரர்.

சௌத்தால் பகுதியில் பியாரா சிங் காப்ரா என்ற சீக்கியர் போட்டியிட்டார். அங்கே 40 சதவீதத்துக்கு மேல் பஞ்சாபி யர்தான். இவர் காலிஸ்தான் இயக்கத்தை வன்மையாக எதிர்ப்பவர். இவரை எதிர்த்து இன்னொரு போட்டி தொழிற்கட்சி வேட் பாளரும் போட்டியிட்டார். ஆக, உட் கட்சிச் சண்டையை அங்கேயும் நம்மவர் கொண்டு போகிறார்கள்!

- சித்தார்த்

## திடீர்த் திருப்பத்துடன் டான்கலிலியோ



◆ பதின்மூன்று வாரங்கள் போனதே தெரியவில்லை. நல்ல விறுவிறுப்பு.
ஒரூர், வி. ஆர். ராஜேஷ்.

◆ டான்கலிலியோ யார் என்பதைக் கடைசி வரை சஸ்பென்ஸாகவே வைத்திருந்தாலும், பெரிய சாதனை நிகழ்த்தப் போகிறார் என்று எதிர்பார்த்த ஏ. சி. பி. தேவதேவன், டான்கலிலி யோவைப் பிடித்தது சினிமா க்ளைமாக்ஸ் போல்தான் இருந்தது.
திருப்பரங்குன்றம், டி. கே. சுப்பிரமணியன்.

◆ செஸ் காய்களை நகர்த்துவது போல், லாவகமான நடையில் கதையைக் கொண்டு சென்ற பத்மா ரவிசங்கருக்குப் பாராட்டுக்கள். ஜெயராஜின் படங்கள் அருமை.
மோகனூர், நா. மோகன்.

◆ கதைக்கு உயிரோட்டமாய் ஜெ...வின் படங்கள்... திரைப்படங்களுக்கு இளையராஜா இசை போல...!
மேல்பட்டி, எஸ். மாறன்.

◆ சஸ்பென்ஸ் - விறுவிறுப்புடன் சென்று கொண்டிருந்த டான்கலிலியோ தொடரைப் பொசுக்கென்று முடித்த போது, நூறு கிலோ மீட்டர் வேகத்தில் சென்று கொண்டிருந்த காரை சடன் பிரேக் போட்டு நிறுத்தினால் ஏற்படக் கூடிய அதிர்ச்சி கலந்த உணர்வுதான் ஏற்பட்டது.
கொளவைட்டம், கே. ஆர். தேவேந்திரன்.

◆ பத்மா ரவிசங்கரின் ''டான் கலிலியோ'' நாங்கள் எதிர்பார்த்த முடிவுதான் என்றாலும் அதனை அருமையாகக் கூறி முடித்து விட்டார்.
திருச்சி - 20, பி. எஸ். ஜி. ராஜன்.

◆ ஹிட்ச்காக் சஸ்பென்ஸ் நிறைந்த ஓர் அருமையான க்ரைம் த்ரில்லரைப் படித்து முடித்த மனநிறைவு ஏற்பட்டது. கதாசிரியருக்கு மனமார்ந்த பாராட்டுக்கள்.
ஸ்ரீரங்கம், ஆர். கோபாலன்.

# பழைய விளம்பரங்கள்; புதிய மாடல்கள்

கருத்து : ஜூலி
கார்ட்டூன் : செல்லம்



# புகழ்பெற்ற அருணோதயம் தரும் அற்புதமான நாவல்கள்

| நூல் | ஆசிரியர் | ரூபாய் |
|---|---|---|
| பொழுது விடிகிற வேளையிலே - | ரமணிசந்திரன் | 30.00 |
| பானுமதி | " | 12.00 |
| வைரமலர் | " | 40.00 |
| கிழக்கு வெளுத்ததம்மா | " | 20.00 |
| பால் நிலா | " | 25.00 |
| நின்னையே ரதி என்று | " | 12.00 |
| இது ஓர் உதயம் | " | 10.00 |
| என் உயிரே கண்ணம்மா | " | 15.00 |
| என் கண்ணில் பாவையன்றோ | " | 20.00 |
| மெல்லத் திறந்தது கதவு | " | 15.00 |
| பூங்காற்று | " | 22.00 |
| ஒரு மலர் | " | 20.00 |
| மானே! மானே! மானே! | " | 25.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை | " | 15.00 |
| மதுமதி | " | 15.00 |
| நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் | " | 14.00 |
| மயங்குகிறாள் ஒரு மாது | " | 30.00 |
| காதலெனும் சோலையிலே | " | 35.00 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | " | 30.00 |
| தொடுவேடுகள் | " | 20.00 |
| விடியலைத் தேடும் பூபாளம் | " | 22.00 |
| கண்ணே கண்மணியே | " | 20.00 |
| நாதசுர ஓசையிலே | " | 15.00 |
| லாவண்யா | " | 16.00 |
| அவனும் அவளும் | " | 16.00 |
| நேற்றுவரை நந்தவனம் - | அனுராதாரமணன் | 25.00 |
| துணை | " | 25.00 |
| இம்சைகள் | " | 18.00 |
| ரகசிய ராகங்கள் | " | 20.00 |
| காதோடு ஒரு காதல் கதை | " | 16.00 |
| நீயும் நானும் நினைத்தால் | " | 18.00 |
| காதலில் நீ ஒரு காவியம் | " | 14.00 |
| மன்மத வேஷங்கள் | " | 20.00 |
| கனவு மறந்த கண்கள் | " | 20.00 |
| காற்றின் நிறம் கறுப்பு - | ராஜேஷ்குமார் | 22.00 |
| இருட்டுக்கு இரண்டு நிறம் | " | 20.00 |
| கறுப்பு ரத்தம் | " | 18.00 |
| ஒற்றை மேகம் | " | 16.00 |
| ஊதா நிழல் | " | 16.00 |
| நித்தியாவின் நிமிஷங்கள் | " | 20.00 |
| தூத்துப் பொன்மான் | " | 20.00 |
| சூரியதாகம் | " | 20.00 |
| முதல் பகல் | " | 20.00 |
| கவிதா நகர் கடைசித் தெரு | " | 18.00 |
| இன்று இறப்பு விழா | " | 16.00 |
| உயிர் வீழ்ச்சி | " | 18.00 |
| எங்கேயும் எப்போதும் - | ராஜேஷ்குமார் | 15.00 |
| தூக்கும் துரோகங்கள் | " | 20.00 |
| ஒரு பௌர்ணமி மரணம் | " | 13.00 |
| நான் உன்னோடு நீ யாரோடு | " | 16.00 |
| மாண்டவன் கட்டளை | " | 16.00 |
| அருண் ஆஷா ஒரு அக்டோபர் மாதம் | " | 18.00 |
| ஒரு ஆகஸ்ட் மாத ஆகாயம் | " | 17.00 |
| எங்கிருந்தோ ஆசைகள் | " | 20.00 |
| கோகிலாவும் ஒரு கோடைக் காலமும் | " | 15.00 |
| உயிரெடுக்கும் உதடுகள் | " | 15.00 |
| இருள் பொருள் இன்பம் | " | 15.00 |
| நான் தேடும் ரோஜாப்பூ | " | 17.50 |
| மற்றவை நள்ளிரவு 1.05க்கு | " | 17.00 |
| ஒரு ஜனவரியின் ஞாயிற்றுக் கிழமை | " | 12.00 |
| கனவுகள் இங்கே | " | 15.00 |
| இந்து இனி இல்லை | " | 17.50 |
| கண்ணுக்குத் தெரியாத ஒரு வலை | " | 12.00 |
| எதுவரை சொர்க்கம் - | ராஜேந்திரகுமார் | 20.00 |
| எட்டாவது மாடி | " | 10.00 |
| தங்க விழித் தாரா | " | 12.00 |
| ஒரு ஆரம்பம் பல முடிவுகள் | " | 15.00 |
| தாயும் ஆனவள் | " | 14.00 |
| நெஞ்சம் சலங்கை | " | 14.00 |
| மறுபடியும் மரணம் | " | 10.00 |
| மின்னல் இடி பூகம்பம் | " | 12.50 |
| நிழலாக ஒருத்தி | " | 10.00 |
| ரயிலில் வந்த மயில் | " | 12.00 |
| கோடையில் பனி மழை | " | 18.00 |
| மகளிர் மட்டும் | " | 11.00 |
| புத்தம் புது புதிரே - கபா | | 40.00 |
| இதயங்கள் | " | 25.00 |
| உடைந்த விலங்கு | " | 25.00 |
| ரம்யாவுக்கு ஒரு ரோஜா | " | 26.00 |
| நீரில் மிதக்கும் நிலா | " | 25.00 |
| சின்னச் சின்னக் கனவுகள் | " | 17.00 |
| நிலவே நீயும் விலகாதே | " | 14.00 |
| மேலே சில கழுகுகள் | " | 20.00 |
| சிவப்பாய் சில மேகங்கள் | " | 18.00 |

## முதல் தரமான ஜோதிட நூல்கள்

ஜோதிடக் கலைக்கோ ஏ. எம். பிள்ளையின்

| நூல் | பாகம் | | ரூபாய் |
|---|---|---|---|
| ஜோதிடக் களஞ்சியம் | பாகம் | 1 | 25.00 |
| | " | 2 | 30.00 |
| | " | 3 | 20.00 |
| | " | 4 | 10.00 |
| | " | 5 | 15.00 |
| | " | 6 | 15.00 |
| | " | 7 | 15.00 |
| தெசா புத்திகளின் பலன்கள் | | 8 | 12.00 |
| திருமணப் பொருத்தம் பார்ப்பது எப்படி? | | | 10.00 |
| தொழில் அறிவது எப்படி? | | | 10.00 |
| உங்களுக்குக் குழந்தைப் பாக்கியம் உண்டா? | | | 6.00 |
| ஜோதிடம் மூலம் ஆயுள் பலம் அறிவது எப்படி? | | | 8.00 |
| நட்சத்திரங்கள் மூலம் எதிர்காலப் பலன் அறியும் வழிகள் | | | 7.00 |
| புதிய மனையடி சாஸ்திரம் | | | 10.00 |
| நல்ல நாள் பார்ப்பது எப்படி? | | | 8.00 |
| எண் கணித ஜோதிடம் அ. ம. இலக்குமணர் | | | 15.00 |

தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ 7 சேர்த்து M. O. அனுப்பவும். வி. பி. செலவு சேர்த்து வி. பி. பி. யிலும் அனுப்புகிறோம்.

**அருணோதயம்,**

போன் 867553

3, கௌடியா மடம் சாலை,

இராயப்பேட்டை, சென்னை - 600 014.



# கல்கி

50

1992
ஏப்ரல் 19
மலர் : 50
இதழ் : 38
ஆங்கீரச
சித்திரை 7


# அயோத்திக்கு ஓர் அவசரப் பயணம்!

தேசிய ஒருமைப்பாடு சபையின் ஒரு குழு அயோத்திக்கு அவசரம் அவசரமாகச் சென்று, அதைவிட அவசரமாக டில்லி திரும்பியதில் விசேஷ பலன் எதும் இராது, நிச்சயம். ஒரு மணி நேரத்துக்குள் எல்லாவற்றையும் பார்த்து, சகலத்தையும் கேட்டு அறிந்து கொண்டு விட்டதாகப் பெயர் பண்ணின குழு, அதற்கு மேல் அங்கு தங்கியிருந்தால் தீவிர ஹிந்து அமைப்புக்களின் தீவிர எதிர்ப்பைச் சந்திக்க நேர்ந்திருக்கும். இப்போதே அவர்கள் தங்கள் எதிர்ப்பைக் கணிசமாகக் காட்டியிருக்கிறார்கள். குழுவின ருக்கு மாலையிட்டு வரவேற்ற கோயில் பூசாரியே, "இங்கே பார்க்க ஒன்றுமில்லை; நடையைக் கட்டுங்கள்" என்று சொல்லி யிருக்கிறார்!

'இந்தக் குழுவில் முக்கிய அங்கத்தினர்கள் இடம்பெற வில்லை' என்றும் 'வந்தவர்களும் எதையும் சரியாகப் பார்க்க வில்லை' என்றும் உ. பி. முதல்வர் கல்யாண்சிங் குறைகூறிய துடன், 'சவான் நேரில் வரட்டும்; விளக்குகிறேன்' என்றும் அறிவித்திருக்கிறார். பி. ஜே. பி. கட்சியோ இந்தக் குழுவில் அங்கம் வகிக்க மறுத்ததுடன், கட்சி சார்பில் ஒரு தனிக் குழுவை அனுப்பி ஆராயப் போவதாகவும் சொல்லி விட்டது.

குழுவின் தலைவர் எஸ். ஆர். பொம்மை தாம் வேண்டா வெறுப்பாகத்தான் இந்தப் பணியை ஏற்றுள்ளதை ஒளிக்க வில்லை. 'சவானே தலைமை ஏற்று வந்திருக்கலாம்; வராதது தப்பு. எனினும் குழு தன் கடமையைச் செய்யும்' என்று பட்டும் படாமலும் பேசியிருக்கிறார்.

ஆக மொத்தம், நிலைமை கட்டுக் கடங்காமல் போய் விபரீத வடிவம் எடுத்து விடக் கூடாது என்று கவலைப்பட்ட பிரதமர், ஒரு கண்துடைப்பு முயற்சியாகவும் அவகாசம் பெறும் தந்திரமாகவும் விஷயத்தை ஆறப் போடும் உபாயமாகவும் இந்தக் குழுவை அயோத்திக்கு அனுப்பினார் என்றே கருத வேண்டியிருக்கிறது.

பப்ரி மஸ்ஜித் - ராமஜென்ம பூமி பிரச்னை தொடர்பாக, 'நீதிமன்றத் தீர்ப்பு வரும் வரை அங்கே எந்த நிரந்தரக் கட்டடமும் உருவாகக் கூடாது' என்பது நீதிமன்ற ஆணை. 'எதையும் கட்ட வில்லை; இடிக்கத்தான் செய்திருக்கிறோம்; சுற்றுச் சுவர்தான் எழுப்பியிருக்கிறோம்' என்று உ. பி. அரசு வாதாடலாம். ஆனால் 'இன்றுள்ள நிலையே நீடிக்க வேண்டும்; மாற்றம் கூடாது' என்றும் நீதிமன்றம் கூறியிருப்பதை மறப்பதற்கில்லை.

இன்று பப்ரி மஸ்ஜித்துக்கு அருகிலுள்ள சில கோயில்களை இடித்திருப்பதும் சர்ச்சைக்குரிய முறையில் சுற்றுச் சுவர் எழுப்பி இருப்பதும், நாளை அங்கே ராமர் கோயில் எழுப்ப ஒரு வலுவான பாத்தியதையை உருவாக்கிக் கொள்ளும் நோக்கில்தான் என்பதில் ஐயமில்லை. கல்யாண்சிங் பதவிக்கு வந்ததே 'ராமர் கோயில் கட்டுவேன்' என்று கூறிக் கொண்டுதான். எனவே, அவர் வலிமை மிக்க அமைப்புக்களின் வற்புறுத்தலுக்கு ஆளாகி வருவதும் தெளிவு.

பாரதிய ஜனதா கட்சியின் சீரிய பொருளாதாரக் கொள் கைகள், மற்றும் சமுதாய நீதி போன்ற அடிப்படைகளில் பற்றுத லும் நம்பிக்கையும் கொண்ட பலர் - குறிப்பாகத் தென்னாட்டவர் - அக் கட்சியானது தீவிர ஹிந்து மதவாதிகளின் பிடியில் சிக்கி யிருப்பது கண்டு வேதனைப்படவும் செய்கின்றனர். இதனால், 'இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே பொதுவான சிவில் சட்டம் வேண்டும்' என்ற ஓரளவு நியாயமான பி. ஜே. பி. யின் தர்க்கவாதம் கூட வலுவிழந்து ஒலிக்கிறது.

பி. ஜே. பி. தலைவர்கள் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமைக்கும் ஒப்புரவுக்கும் ஒத்துழைப்புக்கும் குரல் கொடுக்காமல், விரோத பாவம் வரை வழி வகுப்பதைக் காண வருத்தமாக மட்டுமின்றி நாட்டின் எதிர்காலம் குறித்து அச்சமாகவும் இருக்கிறது.

வாஜ்பாயி போன்ற சில மிதவாதத் தலைவர்களின் கருத்துக்களுக்கு இதர பி.ஜே.பி. தலைவர்கள் செவிமடுத்து, அயோத்தி விஷயத்தை மட்டுமின்றி, ஹிந்து தீவிரவாதிகளின் பிடியில் தாங்கள் சிக்குவது சரிதானா என்ற அம்சத்தையும் மறு பரிசீலனை செய்வது, அக் கட்சிக்கும் நாட்டுக்கும் நல்லது.

நாட்டு நலனைக் கருதாமல் ஆட்சியில் அமர்வதை மட்டும் குறிக்கோளாகக் கொள்வது ஆபத்து.



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.



* பூமி உதயமாகிறது - சந்திர மண்டலத்தில் எடுக்கப்பட்ட படம்.

# முழுநிலவும் நம் மனமும்

!! பூமியில் உயிர்கள் நிலைத்திருக்க, பல்கிப் பெருகச் சூரிய ஒளி இன்றியமையாதது என்பது தெரியும். ஆனால் சூரியன் என்பது எரிந்து கொண்டிருக்கும் ஒரு நெருப்பு உருண்டை. இந்த நெருப்பு உருண்டை எரிந்து முடியும் தறுவாயில் பூமியிலும் உயிர்கள் அழிந்து போகும். சுமார் பதினோரு பில்லியன் ஆண்டுகளுக்குச் சூரியன் தன்னைத் தானே எரித்துக் கொண்டு, பூமியில் உயிர் தழைப்பதற்கு உதவ வல்லது. அந்த பதினோரு பில்லியன் ஆண்டுகளில் கிட்டத்தட்ட பாதிக் காலம் ஏற்கெனவே முடிந்து போய் விட்டது.

!! சூரியனிடமிருந்து தினந் தோறும் 126,000,000,000,000 குதிரை சக்தி அளவு எரிசக்தி பூமிக்குக் கிடைக்கிறது!!

## அட, அப்படியா!

!! சூரியனின் மையப் பகுதி பதினைந்து மில்லியன் டிகிரி சென்டிகிரேடில் தகித்துக் கொண்டிருக்கிறது! இந்த அளவுக்குச் சூடான ஒரு குண்டூசித்தலை, நாற்றைம்பது கிலோ மீட்டர் தூரத்தில் இருந்தாலே போதும்.... அந்த தகிப்பில் ஒரு மனிதன் மாண்டு போவான்!!

!! முழு நிலவு நாட்களில் கடல் கொந்தளிப்பாக இருக்கும் என்பது தெரியும். நிலவு கடலின் தன்மையைப் பாதிப்பது போல், நம் மனநிலையையும் பாதிக்கும் என்பதற்குச் சில ஆதாரங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

நம் உடலின் எண்பது சதவிகிதம் வெறும் தண்ணீரால் ஆனது. நம் உடலில் உள்ள இரவத்தின் தன்மை, இந்த உலகம் தோன்றிய ஆதி காலத்தில் காணப்பட்ட கடல் நீரின் தன்மையைக் கச்சிதமாக ஒத்து இருக்கிறது. இதனால்தான் நிலவு கடலின் தன்மையை பாதிப்பது போல் மனிதனின் தன்மையையும் பாதிக்கும் என்று நம்புகிறார்கள்.

!! சந்திரன் கீழ் நோக்கிச் சதா விழுந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் அது பக்கவாட்டிலும் நகர்வதால் மேலே தூக்கிவிடப்பட்டு, விழாமல் காக்கப்படுகிறது.

தொகுப்பு : உதய் லால்

# கறுப்புப் பணத்தை ஒழிக்க வழி



**பணக்காரன் ஆகாமல் தடுக்க அதிக வரி போடுவது சோஷலிஸ சித்தாந்தம்.**

**நா. மகாலிங்கம்**

'கணக்கில் வராத பணத்தை - கறுப்புப் பணம் - மக்கள் தாமாகவே முன் வந்து அரசுக்குத் தெரிவிக்கலாம்; இன்று நூறு ரூபாய் கட்டினால் நாளைக்கு அறுபது ரூபாய் திரும்பப் பெற்றுக் கொண்டுவிடலாம். பணம் கிடைத்த விவரம் பற்றிக் கேள்விகள் ஏதும் இராது என்று அரசு அறிவித்தது. இது எப்படி நியாயமாகும்? ஒழுங்காகக் கணக்குக் காட்டி வரி செலுத்தும் போது வருமானத்துக்கு முன்னர் 55 சதவிகிதம் வரை வரி கேட்டார்கள் என்பதை எண்ணிப் பார்த்தால் அநீதி புரியும்.

அபரிமிதமாக வரி போடுகிற போது தான் வரி ஏய்ப்பு, கறுப்புப் பணம் எல்லாம் வருகின்றன. உலகம் முழுவதிலும் பொருளாதார நிபுணர்கள் கறுப்புப் பணம் பற்றி ஆராய்ச்சி பண்ணிச் சொல்லியிருப்பது என்னவென்றால் வரியைக் குறைக்க வேண்டும் என்பதுதான். 20 சதவிகிதம் வரி என்றால் எல்லோருமே சந்தோஷமாகக் கட்டிவிடுவார்கள். 25 முதல் 30 சதவிகிதம் வரை என்றால் கூட அதிகம் வரி ஏய்ப்பு இருக்காது. 30 சதவிகிதத்துக்கு மேலே போகப் போக வரி ஏய்ப்பு அதிகமாகவே செய்யும்.

**நா**ன் ஒரு காலகட்டத்தில் 93 சதவிகிதம் வரி கட்டியிருக்கிறேன். அது அப்படியே படிப்படியாகக் குறைந்து 75 சதவிகிதம் ஆயிற்று. 1964-65 வாக்கில் பைப் ஃபாக்டரி, சர்க்கரைத் தொழிற்சாலை இவற்றில் பங்கு மூல தனம் போடுவதற்காக வங்கிகளில் நாலுலட்ச ரூபாய் கடன் வாங்கினேன். 1974 வரைக்கும், அவற்றில் வந்த வருமானத்தை வைத்து என்னால் வட்டி மட்டுமே கட்ட முடிந்தது. அசலைத் திரும்பச் செலுத்த முடியவே இல்லை. அப்புறம் சொத்துக்களை விற்றுத்தான் கடனைத் திருப்பிச் செலுத்த நேர்ந்தது. சோஷலிஸ சித்தாந்தத்தின் அடிப்படையில், அதிகமாகப் பணக்காரன் ஆகாமல் நிறுத்தி விட வேண்டும் என்பதற்காக, அதிக வரி போடுவது என்று ஏற்பட்டு விட்டது. இங்கிலாந்து போன்ற மேலை நாடுகளில் இவ்வாறு ஏற்பட்டது.

ஆனால், இங்கிலாந்து நாடு இரண்டாம் உலகப் போருக்குப் பிறகு வளர்ச்சியடையாமல் வீழ்ச்சியடைந்ததற்குக் காரணமே அதன் தவறான வரிக் கொள்கைதான் என்பது நிபுணர்களின் கருத்து.

அந்த நாட்டில் பரம்பரையான பெரிய பணக்காரர்கள் எப்படியோ சமாளித்து வரி கட்டாமல் தப்பி விட்டார்கள். புதிதாக வரக் கூடியவர்கள் - அறிவு ஜீவிகளான டாக்டர்கள், வழக்கறிஞர்கள், ஆடிட்டர்கள் போன்றவர்கள் இனிமேல்தான் சம்பாதித்து முன்னுக்கு வர வேண்டும். அவர்களுக்குப் போய் 75, 80 சதவிகிதம் என்று வரி போட்டுத்தாக்கினால் அவர்கள் எப்படி வாழ்க்கை நடத்துவார்கள்? அறிவு ஜீவிகள் எல்லாம் வெளியே போகத் தொடங்கி விட்டார்கள். அமெரிக்காவுக்குப் போனார்கள். அங்கு 40 முதல் 45 சதவிகிதம் வரிதான் இருந்தது. இதுவே குறைவானது தான். இருந்தும் வரி ஏய்ப்பு இருக்கிறது என்பதால், ஜனாதிபதி நிக்ஸன் வந்தபோது

## அடுத்த இதழ் ...

### தஞ்சை நகரச் சிறப்பிதழ்

- தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் என்ன செய்கிறது?
- நகராட்சியின் மின்சார விநியோகமும் மக்களின் புகாரும்!
- கலைப் பொருள்கள் தயாரிப்பு முதல் கலெக்டர் பேட்டி வரை ஏராளச் செய்திகள்...

வரிவிகிதத்தை 25 சதவிகிதமாகக் குறைத்தார்.

நம் நாட்டிலும் கறுப்புப் பணம் அகல வேண்டுமென்றால் தனி நபர் வருமான வரி 30 சதவிகிதமாகவும் நிறுவனங்களின் வரி விகிதம் 30 சதவிகிதமாகவும் குறைக்கப்பட வேண்டும். இப்படிச் செய்து விட்டால் வருமான வரித் துறையில் வேலை குறைந்து ஊழியர்கள் அதிகாரி களின் எண்ணிக் கையும் நாளடைவில் குறையும். இன்று வருமான வரியின் மூலம் வசூலாகிற தொகையில் மிகப் பெரும்பகுதி அந்தத் துறையை நிர்வகிப்பதற்கே செலவாகி விடுகிறது.

மொத்த வருமானத்தில் 4 முதல் 5 சதவிகிதம்தான் வருமான வரியின் மூலம் அரசுக்குக் கிடைக்கிறது. வரி விகிதம் குறைக்கப்படுமானால் வருமான வரி மூலமான வருமானம் 10 சதவிகிதத்துக்கு மேலேயே கிடைக்கும். அதில் சந்தேகமே இல்லை.

அரசுக்கு முக்கியமான வருமானம் தருவது எக்ஸைஸ் துறைதான். சுங்க வரித் துறைதான். இவற்றுக்கு அப்புறம்தான் மற்றவை எல்லாம்.

## பொன்விழா ஆண்டு :: தங்க நகை பரிசுத் திட்டம் - 20

### கோடையில் ஒரு குறும்பு!





"லீவு விட்டாலும் விட்டார்கள்; குழந்தைகள் அடிக்கிற லூட்டி தாங்கலை!" என்று அலுத்துக் கொள்ளும் தாய்மார்கள், பின்னால் குழந்தைகள் சமர்த்தாகப் பள்ளிக் கூடம் போக ஆரம்பித்த பிறகு, வீடு வெறிச்சோட, அவர்கள் விடுமுறையில் செய்த குறும்பை எண்ணி எண்ணிச் சிரித்து மகிழ்வது சகஜம். அப்படி உங்கள் குழந்தை செய்த ஒரு குறும்பை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள். மிக ரசமான நிகழ்ச்சிக்கு பாலு ஜுவெல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமான முள்ள பொன்நகை பரிசு. பிரசுரமாகும் மற்ற துணுக்குகளுக்குச் சன்மானம். "கல்கி காரியாலயம் சென்னை - 32" என்ற விலாசத்துக்கு மட்டுமே எழுதி அனுப்பக் கடைசித் தேதி : ஏப்ரல் 27. "கோடையில் ஒரு குறும்பு" என்று தலைப்புத் தரவும்.

## ‘லில்லி’ உள்பாவாடைகள் தயாரிப்பாளர்

# கரூர் P.R.C. கார்மெண்ட்ஸ்ஸாரின்

### இரட்டிப்புப் பயன் தரும் புதுமையான திட்டத்தில் சேர்ந்து பயனடையுங்கள்.

**டிசைன் நெ. 1**



**டிசைன் நெ. 2**



**திட்டத்தின் விவரம் :**

ரூபாய் *210/-* செலுத்தியவுடன் ஐந்து லில்லி, உள்பாவாடைகள் (Normal Size, இடுப்புச் சுற்றளவு அதிகபட்சம் 35"/88 cms., உயரம் 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.)

*(அல்லது)*

ரூபாய் *250/-* செலுத்தியவுடன் ஐந்து லில்லி உள்பாவாடைகள் (Spl. Size : இடுப்புச் சுற்றளவு : 40"/102 cms, உயரம் : 36"/90 cms., 38"/95 cms., 40"/100 cms., 42"/105 cms.) உங்களுக்கு விருப்பமான கலரில், தேவையான அளவுகளில் பதிவுத் தபால் மூலம் பெற்றுக் கொள்கிறீர்கள். வெளிமார்க்கெட்டில் கிடைக்கும் அதே விலையில் ஒன்றின் விலை (Normal Size : ரூ. 42/ Spl. Size : ரூ. 50/).

இவ்வாறு குறைந்த பட்சம் ஒரு வருடத்திற்கு இரண்டு முறை மொத்தம் 10 லில்லி உள்பாவாடைகள் வீதம் ஐந்து வருடத்திற்கு நீங்கள் பணம் செலுத்தியவுடன் எங்களிடமிருந்து லில்லி உள்பாவாடைகள் பெற்றுக் கொள்கிறீர்கள்.

மேற்படி ஐந்து ஆண்டுகளில் நீங்கள் பெற்றுக் கொண்ட லில்லி உள்பாவாடைகளுக்காக செலுத்திய பணம் முழுவதையும் (அதாவது ஒவ்வொரு முறையும் நீங்கள் செலுத்திய பணம் ரூ. *210/-* அல்லது ரூ. *250/-* வீதம் ஐந்து ஆண்டுகளில் 10 முறை செலுத்திய தொகை ரூபாய் *2,100/-* அல்லது ரூபாய் *2,500/-*) ஆறாவது ஆண்டு துவக்கத்தில் திரும்பப் பெற்றுக் கொள்ளுகிறீர்கள்.

இத்திட்டத்தின் மூலம் உங்கள் தேவைக்கு தரத்தில் சிறந்த, வண்ணம் கலையாத வடிவமைப்பில் சிறந்த மற்றும் தேவையான அளவுகளில் லில்லி உள்பாவா டைகள் பெற்றுக் கொள்வதுடன் நீங்கள் செலுத்திய பணத்தையும் திரும்பப் பெற்றுக் கொள்கிறீர்கள்.

இத்திட்டத்தில் இந்தியாவில் எந்தப் பகுதியில் உள்ளவரும் சேர்ந்து பயனடையலாம். Normal Size ரூ. 210/-; Spl. Size ரூ. 250/-. உங்கள் தேவைக்கு D.D. அல்லது M.O. கீழ்க்கண்ட முகவ ரிக்கு அனுப்பி வைக்கவும்.


## P.R.C. கார்மெண்ட்ஸ்,

### லில்லி உள்பாவாடைகள் தயாரிப்பாளர்,

26, பிரதட்சணம் ரோடு, ‘ஏ’ பிளாட்,

கரூர் - 639 002. தொ.பே.: 21946.


*குறிப்பு : 1)* தபால் செலவை எங்கள் நிறுவனமே ஏற்றுக் கொள்கிறது. *2)* Normal Size டிசைன் நெ. *1 & 2* ல் கிடைக்கிறது. Spl. Size டிசைன் நெ. *1* ல் மட்டும் கிடைக்கிறது. *3)* இத் திட்டத்தில் வியாபாரிகளும் கலந்து கொள்ளலாம். விவரங்களுக்கு எமது நிறுவனத்துடன் தொடர்பு கொள்ளவும்.

**Repayment Guarantee Card உடனடியாக வழங்கப்படும்**



# பாலம்

### முதலுதவிப் பயிற்சி பெற...

முதலுதவிப் பயிற்சி பெற ஆசை. முதலுதவிப் பயிற்சி அஞ்சல் மூலம் கற்பிக்கும் நிறுவனம் ஏதாவது இருப்பின் என் ஆவல் பூர்த்தியாகும். ஏனெனில் நான் இருக்கும் ஊரில் பயிற்சி பெறும் வசதி இல்லை. உதவுங்கள்.

- ஜே. கமலேஷ்,
7-A, சின்னசாமி தெரு,
கொடைநகர் கிராமம்,
திருவந்திபுரம் அஞ்சல் - 604 407.

### தபால் தலைகள் தேவையா?

நான் சேர்த்து வைத்துள்ள பல உள்நாட்டு, வெளிநாட்டுத் தபால் தலைகளை அவற்றை நன்கு உபயோகித்துக் கொள்ளக் கூடிய நபருக்குக் கொடுக்க விரும்புகிறேன். தேவையுள்ளோர் தொடர்பு கொள்ளவும்.

- டி. தியாகராஜன்,
4 பாரிஜாதம்மாள் தெரு,
அரும்பாக்கம்,
சென்னை - 600 106.

### 'சௌபாக்கிய பாஸ்கரம்' இருக்கா?

ஸ்ரீ லலிதா சஹஸ்ரநாமத்துக்கு மகான் ஸ்ரீ பாஸ்கரராயர் எழுதிய உரையான ''சௌபாக்கிய பாஸ்கரம்'' எனும் சமஸ்கிருத நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு தேவை. முன்னர், கும்பகோணம், ஜனார்த்தன அச்சகத்தின் வெளியீடாக ஜி. வி. கணேசய்யரால் பதிப்பிக்கப் பெற்றது. யாரிடமாவது இருந்தால் தொடர்பு கொள்க. விலை கொடுத்துப் பெற்றுக் கொள்கிறேன்.

- வி. சங்கர சுப்பிரமணியன்,
B-53, செவன்டி ஃபீட் சாலை,
பெரியார் நகர்,
சென்னை - 82.

### நுகர்வோர் சங்கம்

மத்திய அரசில் உயர் பதவி வகித்து ஓய்வு பெற்ற நான், சமுதாயப் பணியாற்றும் முகமாக நுகர் வோர் உரிமை காக்கும் இயக்கம் ஆரம்பிக்க எண்ணுகிறேன். (consumer protection movement.) கட்டணம் கிடையாது. அங்கத்தினராகத் தொடர்பு கொள்ளவும்.

– B. Krishnamurthy,
S - IV/487, R. K. Puram,
NEW DELHI - 110 022.
Phone : 6883977

### சிவகாமியின் சபதம் முதல் இதழ்...

சிவகாமியின் சபதம் சேகரித்து வருகிறேன். முதல் இதழ் படிக்க எடுத்துச் சென்றவர் திருப்பித் தரவில்லை. யாராவது உதவுவீர்களா? உரிய தொகை அனுப்பவும் தயார்.

- எஸ். ஏ. குமரேசன்,
33, பிருந்தா தெரு,
ஈரோடு - 1

(பாலம் மூலம் இணையும் வாசக அன்பர்களின் வெற்றி - தோல்விகளுக்கு கல்கி பொறுப்பேற்க இயலாது.)

## அசோகர் காலத்தில் சிறுசேமிப்பு!

குஜராத்திலுள்ள கிர் காடுகளில் அகழ்வாராய்ச்சியின் போது 1980 - 1982 ஆம் ஆண்டு கண்டெடுக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றில், ''முதுமையில் செழுமையாக வாழ, தங்கத்தை இன்றே சேமியுங்கள்'' என்ற வாசகம் பாலி மொழியில் பொறிக்கப்பட்டிருந்தது. அசோகர் ஆட்சியிலேயே சிறுசேமிப்பு முறை அமுலில் இருந்திருக்கிறது.

ராஜ ராமநாதன்






GX/20/202 TAM R2

# கஷ்டங்களைக் கஷ்டப்படுத்துவோம்

**வா**ழ்க்கையில் கஷ்டங்களே வரக் கூடாது என்று சிலர் எதிர்பார்ப்பார்கள். இந்த நினைப்பு, குழந்தைத் தனமானது. 'தினம் தோறும் தீபாவளியாகவே இருக் காதா?' என்று ஏங்குகிற, எதிர் பார்க்கிற மத்தாப்பூ மனசுக்காரர்கள்; சின்னப் பிள்ளைகள். கஷ்டமே இல்லாத வாழ்க்கை என்பது யாருக்குமே அமைந்ததில்லை.

ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் தான் இன்பமும் துன்பமும். துன்பம் என்பது வாழ்வின் ஒரு நிலை... ஒரு நிகழ்ச்சி... ஒரு நேரக் கட்டாயம்... விதிப் படியும் இயற்கை நியதிப்படியும் நடந்தாக வேண்டிய நடப்பு. அந்தக் கஷ்டங்களை எதிர் கொள்வதும் வெல்வதும்தான் வாழ்வின் சுவை.... சுகம்... சுவாரஸ்யம் சவால்கள்... வாழ்க்கையை வளப்படுத்தும் வழிவகைகள்....

கஷ்டம் என்று ஒன்று வராவிட்டால் கடவுளை யார் நினைக்கப் போகிறார்கள்! பத்து மணி பஸ்ஸுக்குப் பதை பதைக்க ஓடி வருகிறோம். பஸ் கிடைத்தால் கடவுள் நினைப்பு வருவதில்லை. "இப்பத்தான் பஸ் போச்சு" என்று ஒருவர் சொன்னால் "அடக் கடவுளே... எப்படி ஆபீஸ் போறது" என்று கடவுளை ஆபீஸ் வரை கூட்டிப் போகிறோம். கஷ்டங்கள் தான் கடவுளை ஞாபகப் படுத்துகின்றன.

கஷ்டத்துக்கான காரணங்களை ஆராய்ந் தால் நமக்கு அறிவுத் தெளிவுவரும். உலக வாழ்வின் உன்னதமான உண்மைகள் புலப் படும்.

**ம**காபாரதப் போர் முடிந்து, அஸ்தினாபுரம் வெறும் அஸ்தி புரமாக - சாம்பல் சாம்ராஜ்யமாகத் தருமரிடம் வந்தது. ஒரு நெருப்புப் போருக்குப்பின் கிடைத்த 'குளைத்' போல! தருமருக்கு ராஜ்ய ஆசையே இல்லை. கண்ணன்தான் தருமர் மனத்தை மாயமாய் மாற்றினான்.

தருமர் தலையில் தங்க மகுடம். பள பளப்பான பட்டாபிஷேக படாடோபம். விருந்து.... மகிழ்ச்சி... விழா மின்னல்... எல்லாம் முடிந்து, அரண்மனை அமைதி யடைந்த மறுநாள் விடியலில், துவார கைக்குக் கண்ணன் புறப்படும் காலை நேரம். தருமரை வணங்கி, அருச்சுனனை அணைத்து, பீமனைத் தழுவி, நகுல சகாதேவருக்கு நல்வாழ்த்துச் சொல்லித் தேரில் ஏறினான் தேரை ஓட்டிய கண்ணபிரான்.

அவன் கண்கள் யாரையோ தேடின... கண்ணனை நோக்கிக் கைகூப்பி நின்ற அந்தத் திரு உருவத்தைக் கண்ணன் க ண் டு பி டி த் து விட்டான். தேர்த்தட்டி லிருந்து குதித்து ஓடிவந்து அவளை வணங்கினான். அந்த பாக்கியவதி குந்தி தேவிதான்.

"அத்தை, போய் வருகிறேன்!" கண்ணன் கனிவான குரலில் விடை கேட்டான்.

"கண்ணா... நலமாகப் போய்வா... புறப்படும் முன் எனக்கு ஒரு வரம் வேண்டுமே...." தயங்கினாள் குந்தி.

"என்ன கேட்பாள்? ஜெப மாலை.... நார்மடி... பூஜைக்கான உபகரணங்களில் ஒன்றிரண்டு... அல்லது ஐந்து பிள்ளை களுக்கும் ஆதரவு... அரவணைப்பு. ஆசீர் வாதம்... அல்லது செத்துப் போன கர்ண னுக்குக் கதிமோட்சம்..... எது கேட்டாலும் தருவது கடமைதானே.

"கேளுங்கள் அத்தை.... கேளுங்கள்... எது கேட்டாலும் தருவேன். இந்த அஸ்தினாபுரத்திலேயே அதிகம் கஷ்டப் பட்டவர் நீங்கள்தான். உங்களுக்கில்லாத உரிமையா? கேளுங்கள்!" ஊக்கப்படுத்தி னான் கண்ணபிரான்.

கைகூப்பி குந்தி கேட்டாள் :

"கண்ணா.... கஷ்டங்கள் வேண்டும். துன்பங்கள் வேண்டும். இன்னும் இன்னும் இன்னல்கள் வேண்டும்."

அத்தனை பேருக்கும் அ தி ர் ச் சி. கண்ணன் பேசினான் :

"அ த் தை... நீ பட்ட கஷ்டங்கள் போதாதா? பிறந்த வீட்டில் நீ வளர வில்லை. பெற்றபிள்ளை கர்ணனை நீ வளர்க்கவில்லை. விரும்பாதபோது தாயா னாய். விரும்பிய போது உன் தாய்மை சாபத்தால் தடை செய்யப்பட்டது, பாண்டு வைப் பிரிந்து துயர் உற்றாய். துரியோதனா திகள் உன் ஐந்து பிள்ளைகளைக் கொன்று விடுவார்களோ என்று அஞ்சி அஞ்சி அழு தாய். கெட்ட பிள்ளைகளைப் பெற்றால் எல்லோரும் கஷ்டப்படுவார்கள். நீயோ நல்ல பிள்ளைகளைப் பெற்றே துயர் உற்றாய். காட்டில் திரிந்தாய். பிட்சை எடுத் தாய். பீமன் பசிக்கு நீ மெலிந்தாய். நல்ல நிலை வந்தபோது தருமன் சூதாட நீ நலித் தாய். அஸ்தினாபுரத்தில் அவமானப்

சுகிசிவம்

பட்டாய். பாரதப் போரிலும் பேரப் பிள்ளைகளைப் பலி கொடுத்துக் கண்ணீர் விட்டாய்... இது போதாதா! இன்னுமா கஷ்டங்கள் வேண்டும்? கஷ்டமே இல்லாத வாழ்க்கையைத்தான் எல்லோரும் கேட்பார்கள். நீ கஷ்டத்தைக் கேட்கி றாயே... ஏன்? ஏன்? ஏன்?''

குந்தியின் வறண்ட இதழ்களில் புன்னகை நெளிந்தது. மெதுவாகச் சொன் னாள்.

''என் ஒவ்வொரு கஷ்டத்திலும் நான் யாரை நினைத்தேன். உன்னைத்தானே. ஓடோடி வந்து நீ தானே காப்பாற்றினாய். கஷ்டங்கள் இல்லை என்றால் உன்னை நினைக்கப் போவதில்லை. நீ எங்கள்



பக்கம் வரப் போவதில்லை. என்னைப் பொறுத்தவரை கஷ்டங்கள் உன்னை அடையும் சாதனங்கள்!''

இதுதான் குந்தித்வம்.....

திருவள்ளுவர் கூட ''தனக்குவமை இல்லாதவனை மனக்கவலை தீர வணங் குக'' என்கிறார். என்ன பொருள்? மனக் கவலை இறைவனை அடைய ஒரு வழி என்பது திருக்குறள் நெறி. ''சங்கடம் ஒஸ்தே வெட்கிடரமணா'' என்று தெலுங் கில் உள்ள பழமொழி இதே கருத்துக்குச் சான்று கூறும். கஷ்டமே இல்லாத வாழ்க்கை என்பது கற்பனை; சினிமாத் தனமான கற்பனை.

எனவே, இறைவனை வேண்டும் போது, ''கஷ்டங்களை வெல்லும் மனோ பலத்தை - தாங்கிக் கொள்ளும் தைரியத் தைத் தா'' என்று வேண்டுவது அறிவு டைமை; தெளிவான மனோநிலை; வளர்ச்சி யின் அடையாளம். திருவள்ளுவர் ஒருபடி மேலே போனார். 'வாருங்கள் கஷ்டத்தைக் கஷ்டப்படுத்துவோம்' என்று கட்சி சேர்க் கிறார். எப்படி? நாம் கஷ்டத்திற்குக் கஷ்டப்படாவிட்டால் கஷ்டமே கஷ்டப் படும் என்கிறார்.... ஆஹா!

*''இடும்பைக்கு இடும்பை படுப்பர்*
*இடும்பைக்கு*
*இடும்பை படாஅ தவர்''*

*கந்தபுராணத்தில் ஒரு காட்சி. பிர மனை முருகன் சிறையில் அடைக்கிறார்.* பெயில் (Bail) எடுக்கப்போன நந்தி ஃபெயில் (Fail) ஆகி விட்டார். சிவபெரு மான் தலையிட்டு விடுதலை கிடைத்தது. ஆலமர் அண்ணல் ஆதங்கத்துடன் பிரம னைக் கேட்டார் : ''சிறைச்சாலையில் சிரமப்பட்டீரா?''

பிரமன் சொன்னார் : ''நான் எனும் ஆணவம் நீங்கியது. ஞானம் பெற்றேன்.''

சிறைச்சாலை அவருக்குத் தவச்சாலை ஆனது!

துன்பங்களுக்குத் துவளக் கூடாது. இக்கட்டுகள் வெற்றியின் படிக்கட்டுகள். கடவுளை அடையக் கஷ்டங்கள் ஒரு வழி. துன்பமும் ஞான வீட்டின் திறவு கோல் தான். வாருங்கள். வள்ளுவர் வழியில் கஷ்டங்களைக் கஷ்டப்படுத்துவோம்.

# ராசி

"சிவா.... சிவா..."

அம்மாவின் அழைப்பைக் கேட்டு, படித்துக் கொண்டிருந்த புத்தகத்தின் பக்கத்தில் அடையாளக் காகிதத்தை வைத்துப் பட்டென மூடி விட்டுத் தடதடவெனப் படியிறங்கி வந்தான்.

முந்தானையில் ஈரக்கையைத் துடைத்துக் கொண்டிருந்த அம்மாவிடம், "என்னம்மா... என்ன விஷயம்?" என்றான்.

"எல்லாம் நல்ல விசயம்தாம்ப்பா... உங்கப்பாவும் நானும் உனக்குக் கல்யாணம் செய்துடலாம்னு நினைக்கிறோம்..." என் றாள் முகத்தில் பரவசத்துடன்.

"அதான் அப்பவே சொன்னேனேம்மா... எனக்கு வேலை பர்மனென்ட் ஆகட்டும்மா. எனக்கு இப்ப அப்படி என்ன வயசாகிப் போயிடுச்சி...?"

"அதில்லே... நேரங்காலம் கூடி வர்ற சமயத்துல முடிச்சிடறது நல்லதுதானே... நேத்து தரகர் ஒரு ஜாதகம் கொடுத்தாரு. உன் ஜாதகத்தோட நல்லாப் பொருந்தி வருது... அது மட்டுமில்லே, ரொம்ப நல்ல குடும்பமாம், சீர்வரிசை நல்லாச் செய்வாங்களாம், இது மாதிரியான சம்பந்தம் கிடைக்கிறது சிரமம். பொண்ணைப் பாருங்க, புடிச்சிருந்தா மத்ததைப் பத்திப் பேசலாம்னு தரகர் சொன்னார். எங்களுக்கும் அதுதான் சரின்னு படறது. நல்ல பொண்ணாப் பதவிசா நம்ம குடும்பத்துக்கு ஏத்த மாதிரி கிடைக்கணும்ல... இந்தக் காலத்துல பொண்ணுங்கள்ல அது மாதிரி கிடைக்கிறது சி ர ம ம். தரகர் சொல்றதைக் கேட்டப்ப எனக்கென்னவோ இந்த இடம் நமக்கு ஒத்து வரும்னு பட்டுது. நாம நினைக்கிறோம் அவன் முடிச்சிக் கொடுக்கிறான். கல்யாணம்கிறது சொர்க்கத்திலே மு டி வா கி ற தப்பா..." அ ம் ம ா தனக்குத் தெரிந்த விதமாகவெல்லாம் பேசி, அவன் மனசை மாற்ற முயன்றாள்.

அவனுக்குக் குழப்பமாக இ ரு ந் த து. "சரிம்மா" எ ன் று சொ ல் லி விட்டு, மீண்டும் விட்ட இ ட த் தி லிருந்து நாவலைத் தொடரப் படி ஏறினான்.

அவன் முதுகைப் பார்த்து, "அப்ப நாளைக்கே போயிட்டு வந்துடலாம்!" என்றாள்.

அவள் ஒரு கிராமத்து வார்ப்பாகவுமில்லாமல், அதே சமயத்தில் நகரத்தின் போலி நாகரிக மிடுக்குமில்லாமல் இருந்தாள். வெள்ளித் தட்டிலே பளிச்சென்றிருக்குமே அந்த மினுமினுப்பு.

அவன் லயித்துப் போய்ப் பார்த்தான். எளிமையான மேக்கப். உப்பிய கன்னத்தில் லேசாகப் பவுடர் தீற்றல். லிப்ஸ்டிக் உபயோகிக்காமலே சிவந்த உதடுகள். கூரான மூக்கு. எல்லாவற்றையும் விட சாந்தம் தவழும் முகம்.

அவள் லேசாகக் குனிந்து காப்பி கொடுத்து விட்டுக் காற்று மாதிரி ஓசையில்லாமல் உள்ளே திரும்பிச் சென்று விட்டாள்.

பெண்ணின் அப்பாதான் பேசினார். சற்று எச்சரிக்கையோடுதான் பேசினார். "எங்க பொண்ணுக்காக எல்லாம் சேர்த்து வச்சிருக்கோம்னு சொல்ல முடியாது; ஆனா கடனை உடனை வாங்கி எப்படியும் சீரும் சிறப்புமா அவ கல்யாணத்தை முடிச்சிடணும்னு ஆசை..."

சிவாவும் அவன் அப்பாவும் அமைதி காத்தனர். சிவாவின் அம்மாதான் தங்கள் மகனுக்கு எவ்வளவு சீர்வரிசை தர வேண்டும் எனப் பட்டியலிட்டாள்.

சிவா சற்று நெளிந்தான்.

பெண்ணின் தந்தை தன் ஒடிந்து விழும் தேகத்தை மிகவும் சிரமப்பட்டு நிமிர்த்திக் கொண்டு, பொறுமையாகக் கேட்டுக் கொண்டார்.

"எங்களோட விருப்பத்தையும் எதிர்பார்ப்பையும் நான் சொல்லிட்டேன். மேற்கொண்டு எங்க முழு அபிப்பிராயத்தையும் வீட்டுக்குப் போ ய் க் கலந்து பேசிக்கிட்டுத் தரகர் மூலமாச் சொல்லி அனுப்பறோம்" என் றாள்.

சாத்வீகமாகப் பேசினார் பெண்ணின் தந்தை. "ரொம்ப நல்லது. எங்க பொண்ணு உங்க வீட்ல வந்து வா ழ ணு ம் னு நான் ஆசைப்படறேன். அப்படி நடந்துன்னா நாங்க ரொ ா ம் ப க் கு டு த் து வச்சவங்கதான்..." என

> **"எங்க பொண்ணு உங்க வீட்ல வந்து வாழணும்னு நான் ஆசைப்படறேன். அப்படி நடந்துன்னா நாங்க ரொம்பக் குடுத்து வச்சவங்கதான்..."**



மிகவும் பணிவுடன் எழுந்து வணங்கி அவர்களுக்கு விடைகொடுத்தார்.

"பாத்தா, பொண்ணு ரொம்ப அடக்க ஒடுக்கமா நல்லாத்தானிருக்கா... ஆனா அவ்வளவு வசதியில்லையோ..." என வீட்டுக்கு வந்ததும் அம்மா சற்று அலுத்துக் கொண்டாள்.

அப்பா வழக்கம் போல பெருமூச்சு விட்டுக் கொண்டு தாழ்வாரத்துக்குள் சென்று படுத்துக் கொண்டார்.

இவன் மட்டும் சற்றுத் தயங்கி நின்றான்.

"என்ன? பொண்ணு புடிச்சிருக்குன்னு சொல்லப் போறே அதானே..."

"இல்லம்மா... இப்ப நாம இவ்வளவு சீர் செனத்தி செய்துதான் ஆகணும்னு அவங்களைக் கட்டாயப்படுத்தறது அவ்வளவு நல்லாயில்லேம்மா..." என மெல்லிய குரலில் சொன்னான்.

"உனக்கு இந்த வயசில அழகு மட்டும்தான் கண்ணுக்குத் தெரியும். பணத்தோட அருமை பின்னாடிதான் புரியும். நாளைக்குத் தரகர் வந்ததும் கண்டிக்கச் சொல்லிடப் போறேன். 'நாங்க எதிர்பார்க்கிற சீர் வரிசையிலே கொஞ்சம் குறைஞ்சாலும் இந்தக் கல்யாணத்துக்கு

**சுவேதா**

ஒத்துக்க மாட்டோம்'னு. பொண்ணு அடக்கவொடுக்கமா மட்டும் இருந்திட்டாப் போறுமா?'' என அம்மா சற்று அலட்சியமாகவே பேசினாள்.

அவனுக்கு எரிச்சலாக இருந்தது. அடுத்த நாள் அவன் மாடியை விட்டு இறங்கி வரும் போது, அம்மா தரகரிடம் பேசிக் கொண்டிருந்ததைக் கவனித்தான்.

**மா**லை அலுவலகம் விட்டு வெகு உற்சாகத்துடன் திரும்பினான். தரகரும் அம்மாவும் பேசிக் கொண்டிருந்தார்கள். அம்மாவைத் தனியே அழைத்து, உற்சாகத்துடன், ''எனக்கு வேலை நிரந்தரமாயிட்டுது...'' என்றான்.

''எல்லாம் அந்தப் பொண்ணோட ராசிதான். நாம கேட்ட சீர்வரிசையைத் தரவும் அவங்க சம்மதிச்சிட்டாங்களாம். அதோட உனக்கு வேலையும் நிரந்தரம் ஆனதுக்கு அவளோட ராசிதான் காரணம். அவ அடி எடுத்து வச்சாலே நம்ம குடும்பம் சீரும் சிறப்புமா ஆயிடும்...'' என்றாள் சந்தோஷமாக.

சிறிது அமைதியாக இருந்த சிவா மெதுவாகச் சொன்னான் : ''நீ சொல்றது சரிதாம்மா. அந்தப் பொண்ணோட ராசியால எனக்கு வேலை நிரந்தரமாயிட்டுது. ஆனா, என்னோட ராசியும் உன்னோட ராசியும் சேர்ந்து, கடனை உடனை வாங்கித் தானே அவங்கப்பாவாலே அவளுக்கு வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் பண்ணச் செஞ்சிருக்கு... நம்ம ராசியை என்னன்னு சொல்றது...''

அம்மா விக்கித்துப் போய் நின்றாள்.

## அருள்வாக்கு



**ரொ**ம்பவும் Controversial ஆன (சர்ச்சைக்கிடமான) புஸ்தகம் எழுதின ஒரு வெள்ளைக்காரர் (ஆர்தர் கீஸ்லரும் அவர் எழுதிய 'Darkness at Noon' என்ற நூலும் குறிப்பிடப் பெறுகின்றன.) என்னிடம், ''உங்கள் கோயில்களில் என்ன இப்படி ஒரே சத்தமும் கூச்சலுமாயிருக்கே?'' என்று கேட்டபோது, நான் சொன்னேன்: ''சர்ச்சிலும், மசூதியிலும், புத்த விஹாரத்திலும் Silent Prayer செய்கிறது போலக் கோயிலில் செய்யணும் என்பது முக்ய உத்தேசமில்லை; எங்களுக்கு ஏகாந்தத்தில் த்யானம்தான் முக்யம். த்யானம், Congregational Worship (கூடிப் பிரார்த்தனை சொல்லி வழிபடுவது) ஆகியவற்றிற்காகக் கோயில் இல்லை. ராஜா நம்மை ரக்ஷிக்கிறான் என்பதற்காக அவனுக்கு அரண்மனை, அலங்காரம், பரிவாரம், படாடோபம் எல்லாம் கொடுக்கிறோம்; வரியும் கொடுக்கிறோம் அல்லவா? அதே மாதிரி ஸர்வலோக ராஜாவாக, ஸர்வ காம ரக்ஷகனாக இருக்கப்பட்ட பகவானுக்குப் பொன்னையும் பூஷணத்தையும் கொடுத்துப் பெரிசாகக் கோயில் கட்டி வைத்து, மேளதாள விமரிசையோடு உத்ஸவம் செய்வதே Community thanksgiving ஆக (ஸமூஹ நன்றியறிவிப்பாக) Collective offering ஆக (கூடிக் காணிக்கை செலுத்துவதாக) எங்கள் ஆலய வழிபாட்டு முறை அமைந்திருக்கிறது. இங்கே அமைதியை எதிர்பார்க்க முடியாது. அமர்க்களம், ஆரவாரம், மேளதாளம், கண்டா மணி, அதிர்வேட்டு இருக்கத்தானிருக்கும். அமைதியாக த்யானம் பண்ண அவரவர் வீட்டிலும் பூஜாக்ருஹமுண்டு. ஆற்றங்கரை, குளத்தங்கரை உண்டு'' என்று சொன்னேன்.

இப்படிச் சொன்னதால், கோயிலில் அவரவரும் இரைச்சல் போட்டுக் கொண்டு, அரட்டை அடித்துக் கொண்டிருப்பதற்கு லைஸென்ஸ் தந்ததாக அர்த்தமில்லை. *சாஸ்த்ரோக்தமாக அநுமதிக்கப் பட்டிருக்கும் ஓசைகளை* - மணி அடிப்பது, வேத கோஷம், தேவாரம், பஜனை, மேளம், புறப்பாட்டில் வெடி இவற்றைத்தான் - நான் சொன்னது.

இந்த மாதிரி சாஸ்த்ரோக்தமான சப்தங்களுக்கே மௌன த்யானத்தில் ஒருத்தனை ஈடுபடுத்துகிற அபூர்வமான சக்தி உண்டு. இம்மாதிரி சப்தங்களுக்கு நடுவிலேயே ஸந்நிதானத்தில் சிறிது கண்ணை மூடிக் கொண்டால், அல்லது தக்ஷிணாமூர்த்திக்கு எதிரே ஜபம் பண்ண உட்கார்ந்து கொண்டால், சட்டென்று ஒரு லயிப்பு உண்டாகி விடும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

விவேகானந்தா கல்வி நிலையத்தின்

# கோடை விடுமுறை ஆங்கிலப் பயிற்சித் திட்டம்

## சேர்க்கை அறிவிப்பு

ஆங்கிலப் பயிற்சியளிப்பதில் தமிழகத்தின் தலை சிறந்த கல்வி நிலையம் என்ற தனிப் புகழ் பெற்று விளங்கும் விவேகானந்தா கல்வி நிலையத்தினர் கோடை விடுமுறை நாட்களை மாணவர்கள் பயனுள்ள வகையில் கழிக்க கோடை விடுமுறை ஆங்கிலப் பயிற்சித் திட்டத்தினை வழங்குகிறார்கள்.

### பயிற்சியின் நோக்கம்

ஆங்கில இலக்கணம் ஒரு புரியாத புதிராக இருக்கிறதே. இதனால் ஆங்கிலப் பாடங்களில் போதிய மதிப்பெண்கள் பெற முடியவில்லையே என வருந்தும் மாணவர்களுக்கு அடிப்படையிலிருந்து தமிழ் மூலமாக ஆங்கில இலக்கணத்தை எளிய முறையில் சொல்லிக் கொடுத்து அவர்களை ஆங்கில மொழியில் புலமை பெறச் செய்ய வேண்டும் என்பதே இப்பயிற்சியின் முக்கிய நோக்கமாகும்.

### பயிற்சியின் சிறப்பு

- பொருள் தெரியாமல் எத்தனை நாட்கள் இந்த இங்கிலீஷ் சம்மரிகளை மனப்பாடம் செய்து எழுதுவது என்று வேதனைப்படும் மாணவர்கள் இப்பயிற்சியின் மூலம் ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டு, சுயமாக ஆங்கிலத்தில் கட்டுரைகள் கடிதங்கள் எழுதும் ஆற்றலை நிச்சயம் பெற முடியும்.
- இங்கிலீஷ் மீடியத்தில் சேரத் தயங்கும் மாணவர்கள் இப் பயிற்சியினை முடித்தபின் தங்களது உயர் படிப்பினைத் தயக்கமின்றி இங்கிலீஷ் மீடியத்தில் தொடரலாம்.

### பயிற்சி முறை

இப்பயிற்சியில் சேரும் மாணவர்களுக்குப் பாடங்கள் அனைத்தும் தபால் மூலமாக வீட்டிற்கே அனுப்பி வைக்கப் படும்.

பாடங்கள் அனைத்தும் ஓர் ஆசிரியர் உங்களிடம் நேரில் உரையாடுவதைப் போல மிகவும் எளிய முறையில் அமைக்கப்பட்டுள்ளன.

### பயிற்சியில் சேருவது எப்படி?

தபால் முறைப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெற விரும்பும் மாணவர்கள் தங்களது பெற்றோரது சம்மதத்துடன் கீழ்கண்ட முகவரிக்கு ஒரு போஸ்ட் கார்ட்டில் "கோடை விடுமுறைப் பயிற்சித் திட்டத்தில் சேர விரும்புகிறேன்" என்று எழுதி அனுப்பினால் போதும்.

பயிற்சி பற்றிய விபரங்களை நாங்கள் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

### நேர்முகப் பயிற்சி

நமது கல்வி நிலையத்தில் நேர்முகப் பயிற்சிக்கென சிறப்பு வகுப்புகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன.

சென்னையில் வசிப்பவர்கள் இச் சிறப்பு வகுப்புகளில் சேர்ந்துபயன் பெறலாம். வெளியூர் மாணவர்களுக்கு ஆஸ்டல் வசதி இல்லை.

இன்றே கீழ்க் கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்.

---

விவேகானந்தா கல்வி நிலையம்
"கோடை விடுமுறைப் பயிற்சித் திட்டம்"
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை 600 017.

NAGA

# நிலா மயக்கம்

**சுபா**

## 2

### சென்ற இதழில்....

நந்தினிக்கும், தேவராஜிற்கும் கல்யாணம். நந்தினியை மணக்க ஆசைப்பட்ட அஸிஸ்டெண்ட் டைரக்டர் அருண்குமார் வந்திருந்து பரிசுப் பொருள் கொடுத்து விட்டு விலகுகிறான். அவனை மறந்து விடு என்று அறிவுரை சொல்கிறாள் நந்தினியின் அம்மா. இனி....

அருண்குமார் ஆற்று மணலில் உட்கார்ந்திருந்தான். ரொம்பவும் சோகமாக இருக்கும் சந்தர்ப்பங்களில் இந்த ஆற்று மணல் அவன் காயங்களைத் தடவிக் கொடுப்பது வழக்கம். கடைசியாக அம்மா செத்துப் போன போது. அடுத்தபடி இப்போது.

பகலெல்லாம் சூரியச் சூட்டை உள் வாங்கிக் கொண்ட மணல், இப்போது அருண்குமாரைச் சுட்டது. அவனுக்கு அது உறைக்கவில்லை. பார்வையில் ரயில் பாலம் தெரிந்தது. பாலத்தின் மேல் இரை விழுங்கிய மலைப் பாம்பு போல ஒரு கூட்ஸ் ரயில் சோம்பேறித்தனமாகக் கடந்து கொண்டிருந்தது.

நாற்பது பெட்டிகளுக்கு மேல் எண்ண முடியாமல் கவனம் சிதைந்தது. எவளை மறக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு வந்திருந்தானோ, அவள் நினைவு மறுபடி அவனைச் சுண்டி இழுத்தது.

நந்தினி. கைநிறைய அள்ளிய ஆற்றுநீர் விரலிடுக்கு வழியே கண்ணெதிரே நழுவுகிற மாதிரி நந்தினி... இல்லை. நந்தினி ஒன்றும் தானாக நழுவவில்லை. அவள் அடக்கமானவள். அடங்கிப் போய் விட்டாள். நந்தினியை அந்த அடக்கத்திற்காகத் தானே மனசு நாடியது?

அவன் எழுதும் வெள்ளித் திரைக் காதலுக்கும், நிஜக் காதலுக்கும் நிழலளவு கூட சம்பந்தமில்லை! சினிமாவில் காதலர்கள் பேசிக் கொள்கிற மாதிரி, ஒரு தடவை கூட அவன் அவளிடம் பேசியதில்லை. இருந்தாலும் நந்தினியிடம் மனது வேரூன்றிப் போனது, தாமரைத் தண்டு மாதிரி இல்லாமல், பாறையைப் பிளந்து கொண்டு காலூன்றும் அரசமர வேரூன்றல் போல் தான் அவன் உணர்ந்து கொண்டிருந்தான். அவன் உணர்வுகளோடு அவள் வாழ்நாள் எல்லாம் ஒன்றிப் போகப் போகிறாள் என்றுதான் அவன் கனவுகள் கொண்டிருந்தான்.

நந்தினியைச் சந்திக்காமலே இருந்திருக்கலாம். காதல் காட்சி ஒன்றுக்கு வித்தியாசமான உடைகள் டிஸைன் செய்ய வேண்டும் என்று, அவன்தான் ரம்யா டிரஸ் டிஸைனரைத் தேடிச் சென்றான். அங்கே காஸ்ட்யூம் டிஸைன் செய்வது ஒரு பெண் என்பது அங்கே போன பிறகுதான் அவனுக்குத் தெரியவந்தது. அந்தப் பெண்ணும் அழகானவள், அடக்கமானவள், ஒரு கோணத்தில் அவன் அம்மாவை ஞாபகப்படுத்துபவள் என்பது அவளைப் பார்த்து ஓரிரு வார்த்தைகள் பேசிய பிறகுதான் தெரியவந்தது.

அவளை அடிக்கடி பார்க்க வேண்டும் என்ற உணர்வுக் கிளர்ச்சிக்கு, நிச்சயம் அவள் அழகான பெண் என்ற கவர்ச்சி மட்டும் காரணமில்லை. அவன் தினம் தினம் அழகான பெண்களுக்கு நடுவே புழங்குகிறவன். அழகான, விரைவில் மசியக் கூடிய பெண்கள்.

அவனுக்கு நந்தினி மேல் கவர்ச்சி ஏற்பட, வெறும் இனக்கவர்ச்சி மட்டும் காரணமில்லை. கிட்டத்தட்ட மூன்று வருடங்கள் அவளுடன் தொழில் ரீதியாகப் பழகிய பின்னர்தான் அவனுக்குத் தன் மனத்தில் இருப்பதை வெளிப்படையாக்கவே தைரியம் வந்தது.

'கேட்டா தப்பா எடுத்துக்க மாட்டீங்களே நந்தினி?'

'சொல்லுங்க. நான் பண்ண டிரஸ் டிஸைன் சரியில்லேன்னா வேற டிஸைன் பண்ணித் தரேன். உங்க திருப்திதான் எங்க திருப்தி.'

'நான் காஸ்ட்யூம் பத்திப் பேசலை.'

'பின்னே?'

'ஒரு பொருள் மனசுக்கு ரொம்பப் புடிச்சிப் போச்சின்னா, அதை நாம் பளே வெச்சிக்கணும்னு ஆசைப்படறது தப்பா?'

'இல்லியே.'

'எனக்கு உங்களைப் புடிச்சிருக்கு.'

'என்னது?'

'எனக்குக் கைகால் எல்லாம் வெடவெடங்குது. எப்படியோ தைரியம் வந்து சொல்ல ஆரம்பிச்சிட்டேன். சொல்லி முடிச்சிடறேன். ஒரு

சராசரிப் பொண்ணு மாதிரி கன்னத்தில கின்னத்தில அறைஞ்சி, 'போடா, ராஸ் கல்'னு சொல்லிடாதீங்க! என்ன?'

'சரி.'

'மூணு வருஷமா எனக்கு உங்களைப் புடிச்சிருக்கு. எதனாலன்னு கேட்டா இத னாலதான்னு தனித்தனியாக் காரணம் பிரிச்சிச் சொல்ல முடியாது. அழகால யான்னு கேட்டா ஆமா. இல்ல அடக்கத் தாலயான்னு கேட்டா அதுக்கும் ஆமாதான். இல்ல, பழக்கத்தாலயான்னு கேட்டா, அதுக்கும் 'ம்'னுதான் சொல்லத் தோணுது. எனக்கு உங்களைப் புடிக்கப் போக்கங்கற தால உங்களுக்கு என்னைப் புடிச்சிருக்க ணும்னு இல்ல. புடிச்சிருந்தாச் சொல் லுங்க.'

'சொன்னா?'

'நானும் நீங்களும் கல்யாணம் பண் ணிக்கலாம்.'

'கல்யாணம் பண்ணிக்கப் போற பொண்ணை நீங்க, வாங்கன்னுதான் பேசு வீங்களா?'

'அப்ப..?'

'எனக்கும் புடிச்சிருக்கு.'

'நந்தினி... நெஜம்மாவா நந்தினி?'

'ம்.'

'ஐயோ. நான் ரொம்பக் குடுத்து வெச்சவன். புடிச்சி ருக்கா? நெஜம்மாப் புடிச்சிருக்கா? எத னால புடிச்சி ருக்கு?'

'அழகால யான்னு கேட்டா



ஆமா. இல்ல அடக்கத்தாலயான்னு கேட்டா அதுக்கும் ஆமாதான். இல்ல பழக்கத்தாலயான்னு கேட்டா அதுக்கும் 'ம்'னுதான் சொல்லத் தோணுது.'

'இப்படியெல்லாம் போக்கிரித்தனமாக் கூட பேசுவ நீ?'

'நாம இப்ப டூயட் பாடணுமா?'

'அது சினிமால. நெஜத்தில கல்யாணம் பண்ணிக்கணும். உனக்குப் புடிச்ச மாதிரி நான் நடந்துக்கணும். எனக்குப் புடிச்ச மாதிரி நீ நடந்துக்கணும் எல்லாத்திலயும்.'

'அப்படின்னா நீங்க வந்து எங்க வீட்ல பேசணும்.'

'பேசறேன்.'

'பார்க், பீச், சினிமான்னு நான் எங்கயும் வர மாட்டேன்.'



"உங்கப்பா பூனைப்படை வீரமே!"

"ஆமா. ஆனா வீட்ல மட்டும் எங்கம்மா முன் வெறும் பூனைதான்!"

'ஐயையோ. கல்யாணத்துக்கப்புறம் கூடவா?'

நந்தினி எவ்வளவு இயல்பாகச் சிரித்தாள்? அப்படியே அவனைக் கொள்ளையடித்துப் போன சிரிப்பு. அவன் எவ்வளவு கர்வப்பட்டுக் கொண்டான். எல்லாமே...

'வாங்க தம்பி. நீங்கதான் அருண் குமாரா?'

'ஆமாங்க.'

'உக்காருங்க. நான் நந்தினியோட அப்பா. சட்டநாதன். சாதாரண க்ளார்க் தான்! ரிடையராகப் போறவன். வர்ற பணத்திலதான் பெரிய பொண்ணு கல்யாணத்தையும், சின்னப் பொண்ணு கல்யாணத்தையும் பண்ணலாம்னு நெனைச்சிட்டிருக்கேன்.'

'நந்தினி கல்யாணத்தை சிம்பிளாப் பண்ணாப் போதும்.'

'காப்பி சாப்பிடுங்க. வீட்டைத் தேடி வர்றவங்ககிட்ட தப்பா நடந்துக்கக் கூடாது. இல்ல, முடியாதுன்னு சொன்னாலும் சிரிச்சுக்கிட்டே சொல்லணும். என்ன சொல்றீங்க?'

'நீங்க என்ன சொல்றீங்கன்னு எனக்குப் புரியலை.'

'நந்தினிகிட்டே கல்யாணம் பண்ணிக்கிறயான்னு கேட்டீங்களாம். அதுவும் ஒத்துக்கிடிச்சாமே!'

'ஆமா.'

'அந்த நேரத்தில நந்தினிக்கு அப்பா ஞாபகமும் வரலை. அம்மா ஞாபகமும் வரலை. வயசுக்கு வந்த தங்கச்சி வீட்ல இருக்காளேன்னு யோசிக்கவும் தோணலை! வயசுக் கோளாறு. நான் கொஞ்சம் முன்னாலேயே அவளுக்குக் கல்யாணம் பண்ணியிருந்தா இன்னிக்கு உங்ககூட இப்படி உக்காந்து சங்கடப்பட்டுக்கிட்டிருக்க மாட்டேன்.'

'சார்...'

'பளிச்னு சொல்லிடறேன். தம்பி, உங்க ஜாதி வேற. எங்க ஜாதி வேற. கதைல சினிமாலல்லாம் ஜாதியை ஒழிச்சிடலாம். வாழ்க்கைல ஒழிக்க முடியாது. அதுக்கு இன்னும் நூறு எரநூறு வருஷம் போகணும். அப்படியே நீங்க நம்ப ஜாதிக்காரத் தம்பியாவே இருந்தாக் கூட, நீங்க சினிமா லைன்ல இருக்கறவங்க. அஸிஸ்டெண்ட் டைரக்டரு. எனக்குத் தெரிஞ்ச அஸிஸ்டெண்ட் டைரக்டருங்க எல்லாம் டீக்கும், பன்னுக்கும் அலையறாங்க. வருமானமே இல்லாத உத்தியோகம். எம் பொண்ணை வெச்சி நல்லபடியாக் காப்பாத்துவீங்கன்னு எப்படி நான் நம்பறது? உங்களுக்கு ஒரு பொண்ணு இருந்து, அது சினிமா லைன்ல இருக்கறவனைக் கட்டிக்கறேன்னு வந்து சொன்னா ஒத்துக்குவீங்களா? சினிமாக்காரன்னா அப்படி இப்படி இருப்பான். படத்துக்குப் படம் புதுப் பொண்டாட்டி இருப்பானேன்னு யோசிப்பீங்க இல்ல? கௌரவப்பட்ட குடும்பம் என் குடும்பம். உங்களுக்குக் கட்டிக் கொடுத்தா அதுவும் போயிடும். என் ரெண்டாவது பொண்ணை என்னால கரையேத்த முடியாது. இது சரிப்பட்டு வராது தம்பி. போயிட்டு வாங்க. அப்படி எங்களை மீறி நீங்க கோயில்ல கொளத்தில வெச்சிக் கல்யாணம் பண்ணிக்கிட்டீங்கன்னா, இந்த வீட்ல மிச்சமிருக்கிற மூணு பேரும் சத்தியமா செத்துப் போயிடுவோம்.'

எவ்வளவு குத்து. எவ்வளவு வெட்டு? எவ்வளவு காயம்? ரத்தக் களரியான மனத்துடன் அவன் வந்து விட்டான். அப்புறம் நந்தினி கல்யாணம். அவர்கள் ஜாதிப் பையன். டயர் கம்பெனியில் நிரந்தர வேலை. இவன் குடிக்க மாட்டான். வேறு தொடர்பு வைத்துக் கொள்ள மாட்டான். எழுதிக் கையெழுத்துப் போட்டுத் தந்திருக்கிறானோ என்னவோ.

"நீ படிக்காதவனாயிருந்தும் ஒரு பட்டதாரிப் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கிட்டிருக்கியே, அவள் உன்னை அனாவசியமாகப் பேசறதில்லையே!"

"கிடையவே கிடையாது. ஒரு வார்த்தை கூட விட மாட்டா. 'எதைச் சொல்லி என்ன செய்ய? உங்களுக்குப் புரியவா போகுது?'ன்னுட்டுப் போயிடுவா!"

- கைலாஸ்.



எப்படியோ, நந்தினி நன்றாக இருக்கட்டும். அவள் வாழ்க்கையில் நான் இடறி னேன் என்பதை மறந்து போகட்டும். அவளுக்கு அளித்த அந்தப் பரிசுப் பொருளை அவள் பிரித்துப் பார்ப்பாள். அவள் புத்திசாலி. புரிந்து கொள்வாள். நான் அவளை மறக்க வேண்டும். தெய்வமே! நான் நந்தினியை மறக்க வேண்டும். அதற்காகத்தான் என் அம்மா இருந்த இடத்திற்கு நான் ஓடி வந்திருக்கிறேன். அம்மா என்னை முழுக் காட்டிய ஆற்றின் படியில் அமர்ந்திருக்கிறேன்.

அருண்குமார் பழையனவற்றையெல்லாம் அழிக்க வேண்டும். அதுவும் கண்ணீராலேயே அழிக்க வேண்டும் என்ற உத்வேகத்துடன் மணலில் முகம் புதைத்துக் கண்ணீர் பெருக்கினான்.

ஆற்றுப் பாலத்தில் இரை விழுங்கிய இன்னொரு மலைப்பாம்பு, பெருமூச்சுடன், சோம்பேறித்தனமாக, பெட்டி பெட்டியாகக் கடந்தது.

நந்தினி தேவராஜின் வீட்டிற்கு மறுநாளே கூட்டிக் கொண்டு வரப்பட்டு விட்டாள். மாப்பிள்ளைக்கு உறவு வீடுகளில் விருந்து, மாமனார் வீட்டுச் சீராட்டல் எல்லாம் பிடிக்காத சங்கதி. அவருக்குக் கோபம் வந்து விடும். அதனால் நந்தினியை தலை சீவிப் பின்னி, இரவலாகப் பெற்ற ஜடை பில்லையும், நெற்றிச் சுட்டியும் வைத்து டாக்ஸி ஏற்றி அனுப்பி விட்டார்கள்.

''வலது கால் வெச்சி வாம்மா.''

''மருமவப் பொண்ணு அழகுதான். ஏண்டா தேவராஜி... பேருதான் என்னவோ சினிமாக்காரி பேரு மாதிரி இருக்குதில்ல...''

''நந்தினி... கல்யாணத்தப்ப ஒனக்கு என் ஒறவுக்காரங்களை சரியாத் தெரிஞ்சிருக்காது. நீ யாரோட வாழப் போறேன்னு தெரிஞ்சாத்தான் விட்டுக் குடுத்து, சிரிச்சிப் பேசிப் பழக வசதியா இருக்கும். இது அம்மா. நல்லவங்க. அம்மா நல்லவங்க இல்லேன்னு பையன் சொல்ல முடியுமா? இப்ப புது மாமியார். எனக்குத் தம்பியில்ல. அதனால இன்னொரு மருமக இந்த வூட்டுக்குக் கெடையாது. அதால ஒன்னைத்தான் திட்டுவாங்க. கொஞ்சுவாங்க. ஏத்துக்கோ. இது தங்கச்சி. ஒரே தங்கச்சி. புவனேஸ்வரி. புவனான்னு கூப்புடுவோம். இருவது வயசோ என்னவோ. மூணாவது வருஷம் படிக்கிறா. செல்லம் ஜாஸ்தி. ஒரு வேலையும் செய்ய மாட்டா. சாப்புடுவா. தூங்குவா. படிப்பாளான்னு தெரியலை. இது தாத்தா. இது பாட்டி. அம்மாவோட அப்பா, அம்மா. ஊர்ல நெலம் இருக்குது. ஏதோ கொஞ்சம் நெல்லு வருது. அவங்களைப் பாத்துக்கறதுக்கு எங்களை வுட்டா யாருமில்ல. அதனால இங்க இருக்காங்க. தாத்தா இன்னிக்கும் புது மாப்பிள்ளை மாதிரி கோவிக்கக்குவாரு. பாட்டி சமாதானப்படுத்துவாங்க. அப்புறம் நானு. என்னைப் பத்தி நேத்து ராத்திரியே கொஞ்சம் தெரிஞ்சிக்கிட்டிருப்பே...''

''டேய். என்னடா பேச்சு இது?''

''எம் பொ ண் டா ட் டி தா னேம்மா. பேசுனா என்ன? நந்தினி. அதான் நம்ப ரூம். போ. கொஞ்சம் புடவை மாத்திக்கினு வந்து கூடமாட வேலை செய்.''

''என்னடா. வந்ததும் வராததுமா வேலை செய் வேலை செய்னு... நீ உள்ள போடீக் கண்ணு. கட்டில்ல படுத்துக்கோ. அம்மாளையாவது நெனைச்சிக்கோ. ஆம்படையானையாவது நெனைச்சிக்கோ...''

''நான் சொல்லலை. பாட்டி ஒரு மாதிரின்னு?''

நந்தினி தானிருந்த அறையைப் பார்த்தாள். அறை ஓரத்தில் கட்டில். பழைய வீடு. மர உத்தரங்கள். சுவரில் புதிதாக வர்ணப் பொடி கலந்து, சுண்ணாம்பு பூசப்பட்டிருந்தது. தனிப் போட்டோ ஒன்றில் மாமனார் நாற்காலியில் சிரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பூவும், பொட்டும்.

நந்தினியின் பார்வையில் வெகு தற்செயலாகத்தான் ஷெல்ஃப் தெரிந்தது. ஷெல்ஃபில் அந்தப் பரிசுப் பொருள் தெரிந்தது. நந்தினிக்கு அருண்குமார் கொடுத்தது. தேவராஜ் வாங்கிக் கொண்டது. இது மட்டும் தனியாக இருக்க என்ன காரணம்.

நந்தினி உள்ளூர ஓடிய நடுக்கத்துடன் அந்த ஷெல்ஃபை நோக்கி மெல்ல நடந்த போது, அவள் காலின் புதுக் கொலுசு 'ஜல்' என்றது.

(தொடரும்)

# நடுக்கடல் மீனவருக்கு விண்ணிலிருந்து உதவி!

கடலில் அதிக மீன்கள் கிடைக்கும் பகுதிகள் எவை என்பதை மீனவர்களுக்கு முன்கூட்டியே தெரிவிக்க முடியுமா?

''முடியும், அதன் மூலம் அவர்கள் வாழ்க்கை வளம் பெற உதவ முடியும்'' என்று சொல்கிறது அண்ணா பல்கலைக் கழகம்.

பல்கலைக் கழகத்தின் கடல்வள நிர்வாகத் துறை, நாளிதழ்கள் வாயிலாகவும் வானொலி, டீவி மூலமும் ''அதிக மீன்கள் கிடைக்கும் இடங்கள்'' என்று ஒரு டஜனுக்கு மேற்பட்ட கடல் பகுதிகளை அவ்வப்போது இனம் காட்டி வருகிறது.

இத்துறையின் தலைவர் டாக்டர் நடராஜனையும் பேராசிரியர்களையும் சந்தித்துப் பேசினோம். ''இது எப்படி சாத்தியமாகிறது?'' என்று கேட்டோம்.

''உணவு அதிகம் கிடைக்கக் கூடிய இடங்களை நோக்கித் தான் மீன்கள் போகும். கடலில் வாழும் தாவர உயிரினங்கள், பச்சைப் பொருள் கொண்டு உணவு தயார் செய்கின்றன. இந்தத் தாவர மிதவை உயிரினங்கள்தாம் கடலில் வாழும் மீன் போன்ற அத்தனை ஜீவராசிகளுக்கும் ஆதாரம்.

''தாவர உயிரினங்கள் செழிக்க முக்கியமான அம்சம் கடலின் வெப்ப நிலை. ஆக, கடலின் மேல் பரப்பு வெப்ப நிலை சாதகமாக இருக்கும் இடங்களில் தாவர உயிரினங்கள் செழிக்கும். தாவர உயிரினங்கள் செழிக்கும் பகுதிக்கு மீன்கள் போகும்.

''எனவே நாங்கள் கடலில் பச்சையம் (குளோரோஃபில்) பற்றியும் வெப்ப நிலை பற்றியும் தகவல்கள் சேகரிக்கிறோம்.''

''எப்படிச் சேகரிக்கிறீர்கள்?''

''செயற்கைக் கோள் மூலம் கிடைக்கும் தகவல்களின் அடிப்படையில்தான். கடலின் நிறம், உஷ்ண நிலை மாற்றங்கள் ஆகியவற்றைக் கடலின் நீரோட்டமும் பாதிப்பதால் நீரோட்டத்தையும் கணக்கில் எடுத்துக் கொண்டு, மீன் வளம் மிக்க இடங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன. நீரோட்டத்தை நிர்ணயிப்பதில் காற்றின் வேகத்துக்கும் முக்கிய பங்குண்டு. இதையெல்லாம் கணிக்க, கடலின் முழுப் பரப்பையும் ஒரே சமயத்தில் பார்க்க வேண்டும். இதை செயற்கைக் கோள் மூலமே சாதிக்க முடியும்.''

''செயற்கைக் கோள் எப்படி இவற்றைப் பார்க்கிறது?''

டாக்டர் நடராஜன் ஒரு வண்ணப்படத்தை எடுத்துக் காட்டினார். அதில் கடலின் மேல் பரப்பு, நீலம், பச்சை, மஞ்சள், ஊதா என்று பல நிறங்களில் காணப்பட்டது. ''இதோ பார்த்தீர்களா, இது செயற்கைக் கோள் எடுத்த படம். இந்த செயற்கைக் கோளுக்கு National Oceanic Atmospheric Administration Satellite என்று பெயர். இது போன்ற படங்களைப் ''படிப்பதன்'' மூலம் எங்களால் பல விஷயங்களைப் புரிந்து கொள்ள முடியும். கிடைக்கும் மற்ற பல தகவல்களையும் வைத்து ஒரு தீர்மானத்துக்கு வருகிறோம்.''

''செயற்கைக் கோள் தரும் தகவல்கள் நேரடியாக

டாக்டர் நடராஜன்



கம்ப்யூட்டர் உதவியுடன் ஆராய்ச்சி





☛ செயற்கைக் கோள் எடுத்த கடல் பரப்புப் படம்.

உங்களுக்கு வந்து சேர்கிறதா?''

''இல்லை, தற்போது ஹைதராபாத்தில் அமைந்துள்ள தேசிய தொலை உணர்வு மையம் பெறுகிறது. இது மத்திய அரசின் கடல் மேம்பாட்டுத் துறையைச் சேர்ந்தது. அங்கிருந்து டெலக்ஸ் மூலம் பல்வேறு கடற்கரை நகரங்களுக்கும் செய்திகள் போகின்றன. ஆனால் கூடிய விரைவிலேயே ஹைதராபாத் வசதிகள் எல்லாம் இங்கே, அண்ணா பல்கலைக் கழகத்தின் கடல் ஆராய்ச்சி மையத்துக்கும் கிடைக்க ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.''

''கடலின் மேல் பரப்பு வெப்ப நிலை, குளோரோஃபில் பசுமை எல்லாம் ஒரு நாளைக்கு இருந்த மாதிரி இன்னொரு நாள் இருக்குமா?''

''சுமார் ஒரு வார காலம் அதே நிலையில் இருக்க வாய்ப்புண்டு. அப்புறம் மாறலாம். அதனால்தான் மீனவருக்கு அடிக்கடி தகவல்கள் தருகிறோம்.''

''மகாபலிபுரத்திலிருந்து 90 டிகிரி கோணம் என்கிறீர்கள்.....''

''துறைமுகம்தான் முனை. சாதாரணமாகக் கப்பல், மற்றும் பெரிய விசைப் படகுகளைத் திசைதப்பாது செலுத்த உதவும் ஹைட்ரோகிராஃபிக் சார்ட்டுகளின் அடிப்படையில்தான் இந்த விவரங்களை வெளியிடுகிறோம். கடலில் படகு செல்ல வேண்டிய திசைகளை நிர்ணயிக்கும் திறம் படைத்த நாவிகேட்டர்கள் சுலபமாகப் புரிந்து கொள்வார்கள்.''

''உங்கள் தகவல்கள் மீனவர்களைச் சென்றடைகிறதா?''

''மீன் பிடி கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தகவல்கள் அனுப்புகிறோம். மீனவர்களை நேரிலும் சந்திக்கிறோம். சந்தேக விளக்கம் தருகிறோம். நாங்கள் குறிப்பிடும் இடங்களுக்குச் சென்று மீன் பிடித்துத் திரும்பிய பின், 'எங்கள் தகவல்கள் பலனளித்தனவா?' என்பதை அவர்கள் எங்களுக்குத் தெரிவிக்கக் கோருகிறோம். அது ஆராய்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் மேலும் உதவும்.''

''மீனவர்கள் உங்கள் யோசனைகளை ஏற்கிறார்களா?''

''ஏற்றால் அவர்களுக்குத்தானே நல்லது! குறிப்பிட்ட பகுதிகளுக்கு மட்டுமே மீன் பிடிக்கச் சென்றால் அலைச்சலும் நேரமும் மிச்சமாவது மட்டுமல்ல; விசைப்படகுக்குச் செலவாகும் டீசலும் மிச்சமாகுமே.

''நாங்கள் இன்னொன்றும் மீனவரிடம் கேட்டுக் கொள்கிறோம். 'சிறிய மீன்களைக் கூடப் பிடித்து விடும் வலைகளைக் கொண்டு செல்லாதீர்கள்' என்பதுதான் அது. இந்த மீன்கள் நர்சரி பண்ணைகள் மாதிரி. இவற்றைப் பிடித்து விட்டால் பிறகு வளர்ந்த பெரிய மீன்கள் கிடைக்காமல் போய்விடும். நெல்லைத்தான் அறுவடை செய்ய வேணுமே தவிர, நாற்றங்காலையே வெட்டலாமா?''

இந்தியாவிலேயே தமிழ் நாட்டில் தான் மிக நீண்ட கடற்கரைப் பகுதி உள்ளது. எனவே தென்கிழக்கு ஆசியாவிலேயே வேறு எந்தப் பல்கலைக் கழகத்திலும் இல்லாத இந்த வசதியை அண்ணா பல்கலைக் கழகத்தில் ஏற்படுத்த யோசனை சொன்னார் வைஸ் அட்மிரல் எம்.கே. ரே. யோசனையை 'கப்' பென்று பிடித்துக் கொண்டு மான்யம் அளித்துச் செயலுருப் பெறச் செய்தவர் அன்றைய முதல்வர் எம்.ஜி.ஆர்.

– சாருகேசி

புகைப்படங்கள் : யோகா

# சிவகாமியின் சபதம்

## ஐம்பத்துநாலாம் அத்தியாயம்

## விபரீதம்

மாமல்லர் தமது நிலை குலைந்த நெஞ்சைத் திடப்படுத்திக் கொண்டு, கனிவு ததும்பிய கண்களால் சிவகாமியை நோக்கினார்.

''சிவகாமி! உன்னுடைய நம்பிக்கை வீணாய்ப் போகவில்லையே! உனக்கு நான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றத் தானே வந்திருக்கிறேன்? நூறு காத தூரம் காடும் மலையும் நதியும் கடந்து வந்திருக்கிறேன். பசி பட்டினி பாராமல் இராத் தூக்கமில்லாமல் வந்திருக்கிறேன். நான் ஏறி வந்த குதிரை ஏறக்குறையச் செத்து விழும்படி அவ்வளவு வேகமாய் வந்தேன். சற்று முன்பு நான் கூறிய கடுமொழிகளையெல்லாம் மறந்துவிடு. யார் மேலேயோ வந்த கோபத்தை உன் மீது காட்டினேன். இத்தனை நாளைக்குப் பிறகு நம்முடைய சந்திப்பு இப்படிக் கோபமும் தாபமுமாயிருக்குமென்று நான் நினைக்கவில்லை. எவ்வளவோ ஆசையோடு எத்தனையோ மனக்கோட்டை கட்டிக் கொண்டு வந்தேன்! - போகட்டும், சிவகாமி! புறப்படு, போகலாம்!''

''பிரபு! மன்னியுங்கள்! இப்போது நான் வரமாட்டேன், என் சபதம் நிறைவேறிய பிறகுதான் வருவேன்.''

''சிவகாமி! இது என்ன வார்த்தை? என்னுடன் வருவதற்கு உனக்கு விருப்பம் இல்லையா, என்ன? தாமதிக்க நேரமில்லை.''

''இளவரசே! என் சபதத்தை நிறைவேற்றி வையுங்கள். பாதகன் புலிகேசியைக் கொன்று, வாதாபி நகரத்தைச் சுட்டெரித்து விட்டு, உங்கள் அடிமையின் கையைப் பிடித்து அழைத்துச் செல்லுங்கள். அப்போது நிழல்போல் உங்களைத் தொடர்ந்து வருவேன்.''

''சிவகாமி! உன் சபதத்தை அவசியம் நிறைவேற்றி வைக்கிறேன். ஆனால் அதை நிறைவேற்றுவது எளிதல்ல. பெரும்படை திரட்டிக் கொண்டு, தக்க ஆயுத பலத்தோடு வரவேண்டும். இதற்கெல்லாம் அவகாசம் வேண்டும்; பல வருஷங்கள் ஆகலாம்....''

''பல்லவ குமாரர்தானா இப்படிப் பேசுகிறீர்கள்? வீரமாமல்லரா இப்படிப் பேசுகிறீர்கள்? புலிகேசியைக் கொன்று வாதாபியை வெற்றி கொள்வது அவ்வளவு கடினமான காரியமா? இந்தப் பேதை தெரியாமல் சபதம் செய்து விட்டேனே?... பல்லவ குமாரா! தாங்கள் காஞ்சிக்குப் போய் இராஜ்ய காரியங்களைக் கவனியுங்கள். இந்த ஏழைச் சிற்பியின் மகளைப்பற்றிக் கவலை வேண்டாம்! நான் என்ன பாண்டிய ராஜகுமாரியா, சோழன் திருமகளா - தாங்கள் கவலைப்படுவதற்கு? நான் எக்கேடு கெட்டால் தங்களுக்கென்ன? என் சபதம் எப்படிப் போனால் என்ன?'' என்று சிவகாமி கசப்புடன் பேசினாள்.

''சிவகாமி! நீதான் பேசுகிறாயா? நீ பழைய சிவகாமிதானா?'' என்றார் மாமல்லர்.

''இல்லை, பிரபு! நான் பழைய சிவகாமி இல்லை. புதிய சிவகாமியாகி விட்டேன். என் வாழ்க்கை கசந்துவிட்டது. என்மனம் பேதலித்து விட்டது. இந்தப்

புதிய சிவகாமியை மறந்து விடுங்கள். ஒரு சமயம் தங்களிடம், 'அடியாளை மறக்க வேண்டாம்' என்று வரங் கேட்டேன். இப்போது, 'மறந்துவிடுங்கள்' என்று வரங் கேட்கிறேன்!'' என்றாள் சிவகாமி.

''சிவகாமி! கேள்! நீ புதிய சிவகாமி யானாலும் நான் பழைய மாமல்லன்தான். உன்னைப் பிரிந்திருந்த காலத்திலெல்லாம் ஒரு கணமேனும் உன்னை நான் மறக்க வில்லை. இரவிலும், பகலிலும், கனவிலும் நனவிலும், அரண்மனையிலும் போர்க் களத்திலும், என்ன செய்தாலும் யாரோடு பேசினாலும், என் உள்ளத்தைவிட்டு நீ ஒரு கணமும் அகலவில்லை. உன் பேரில் நான் கொண்ட பரிசுத்தமான காதலின் மேல் ஆணை வைத்துச் சொல்லுகிறேன். நீ செய்த சபதத்தை நிறைவேற்றி வைக்கிறேன். இப்போது என்னோடு புறப்படு!'' என்று மாமல்லர் உணர்ச்சி மிகுதியினால் நாத் தழு தழுக்கக் கூறினார்.

கல்லையும் கனிய வைக்கக்கூடிய மேற்படி மொழிகள் சிவகாமியின் மனத்தைக் கனியச் செய்யவில்லை. பட்ட கஷ்டங்களினாலும் பார்த்த பயங்கரங்களினாலும் கல்லினும் கடினமாகியிருந்தது அவள் உள்ளம்.

''காதலாம் காதல்! காதலும் கல்யாணமும் இங்கே யாருக்கு வேண்டும்?'' என்றாள் சிவகாமி.

''நிஜமாகத்தான் சொல்கிறாயா? காதலும் கலியாணமும் உனக்கு வேண்டாமா?'' என்று மாமல்லர் ஆத்திரத்தோடு கேட்டார்.

''நிஜமாகத்தான் சொல்கிறேன். காதலும் கலியாணமும் எனக்கு வேண்டாம். பழிதான் வேண்டும். வஞ்சம் தீர்க்க வேண்டும். புலிகேசி சாகவேண்டும். வாதாபி எரிய வேண்டும். வாதாபி மக்கள் அலறிப் புடைத்துக் கொண்டு அங்குமிங்கும் ஓட வேண்டும். வேறொன்றும் எனக்கு வேண்டாம்!''

மாமல்லர் மீண்டும் நயமான வார்த்தைகள் கூறினார்.

''சிவகாமி! உன் விருப்பத்தைத் தெரிந்து கொண்டேன். உன்னைக் காட்டிலும் நூறு மடங்கு என் உள்ளம் கொதித்துக் கொண்டிருக்கிறது. உன்னைச் சிறைப் பிடித்து வந்து அவமானப்படுத்திய பாதகனைப் பழிவாங்க என் மனம் துடித்துக் கொண்டிருக்கிறது. கட்டாயம் உன் சபதத்தை நிறைவேற்றி வைக்கிறேன். நீ மட்டும் இப்போது என்னுடன் புறப்பட்டு வந்துவிடு!''

''வரமாட்டேன், இளவரசே! ஆயனச் சிற்பியாரிடம், அவருடைய மகள் இறந்து போய்விட்டாள் என்று சொல்லி விடுங்கள்!''

''சிவகாமி! இது என்ன பிடிவாதம்? கடைசி வார்த்தையாகச் சொல்லுகிறேன், கேள்! உன்னுடைய சபதத்தை நான் கட்டாயம் நிறைவேற்றி வைக்கிறேன். ஆனால், இந்தச் சமயம் என்னுடன் நீ வரா விட்டால் என் மனம் கசந்து போய்விடும். என் அன்பை அடியோடு இழந்து விடுவாய்!''

''அன்பு வேண்டாம் சுவாமி! சபதத்தை நிறைவேற்றுங்கள்.''

''பெண்ணே! பல்லவ குலத்தினர் ஒரு நாளும் சொன்ன சொல் தவறுவதில்லை.''

''இளவரசே! ஆயனச் சிற்பியின் மகளும் சொன்ன சொல்லை மாற்றுவதில்லை!''

''ஆகா! இதென்ன அகம்பாவம்?'' என்றார் மாமல்லர்.

''ஆம், இளவரசே! எனக்கு அகம்பாவந்தான். ஏன் இருக்கக் கூடாது? பாண்டியன் மகளுக்கும், சேர ராஜகுமாரிக்குந்தான் அகம்பாவம் இருக்கலாமா? - நான் சிற்பியின் மகள்தான். ஆனாலும் செந்தமிழ் நாட்டு வீரப்பெண் குலத்திலே பிறந்தவள். காதலன் கழுத்திலே மாலை சூட்டிப் போர்க்களத்துக்கு அனுப்பிய மாதர் வம்சத்தில் பிறந்தவள். கண்ணகித் தெய்வம் வாழ்ந்த நாட்டில் நானும் பிறந்தேன். எனக்கு ஏன் அகம்பாவம் இருக்கக்கூடாது, பிரபு?''

சிவகாமியின் மனத்தைத் திருப்ப மேலே என்ன சொல்லலாம் என்று அவர் சிந்திப்பதற்குள், சேனாபதி பரஞ்சோதி பரபரப்புடன் உள்ளே வந்தார். மாமல்லரின் காதில் ஏதோ சொன்னார்.

மாமல்லரின் முகத்தில் ஒரு கணம் திகிலின் அறிகுறி தோன்றியது. மறுகணம் சமாளித்துக் கொண்டார். ''சேனாபதி! இந்த மூடப் பெண்ணின் பிடிவாதத்துக்கு முன்னால் நம்முடைய திட்டமெல்லாம் சின்னா பின்னமாகிவிடும் போலிருக்கிறது!'' என்றார். சிவகாமியின் பக்கம் கோபமாகத் திரும்பி, ''பெண்ணே! நீ வருவாயா? மாட்டாயா? உன்னுடன் வாதமிட்டுக் கொண்டிருக்க நேரமில்லை!'' என்றார் மாமல்லர்.

அப்போது சேனாபதி பரஞ்சோதி குறுக்கிட்டு, ''அம்மணி, எங்களுடைய நிலைமையைத் தெரிந்து கொள்ளுங்கள். எதிரிகளின் கோட்டைக்குள்ளே தனியாக நாலு பேர் வந்திருக்கிறோம். கோட்டைச் சுவர்மீது நூலேணியுடன் கண்ணனும் அவன் தந்தையும் காத்துக் கொண்டிருக்கிறார்கள். கோட்டைக்கு வெளியில் இந்த நிமிஷத்தில், நரபலி கொடுக்கும் காபாலிகர்கள்

அமரர் கல்கி

எங்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இங்கேயோ அந்தக் கள்ள பிக்ஷு நாங்கள் வந்திருப்பதை அறிந்துகொண்டு, இதோ விழுமுனையில் வந்து கொண்டிருக்கிறார். தேவி! இந்த நிலைமையில் நாங்கள் இப்படி வீண் விவாதம் வளர்த்தக் கூடாது....'' என்றார்.

'பெண் புத்தி பேதைமையுடைத்து' என்று முன்னோர் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா? அது உண்மை என்பதை நிரூபிக்கும்படி சிவகாமி அப்போது பேசினாள்.

''ஐயா! பல்லவ குமாரரும் அவருடைய அருமைத் தோழரும் கேவலம் மண்டை ஓட்டில் பிச்சை வாங்கும் காபாலிகருக்கும், காவித்துணி தரித்த புத்த பிக்ஷுவுக்கும் பயந்து ஓடுவார்கள் என்பது இதுவரையில் எனக்குத் தெரியாமலிருந்தது. அதற்காக என்னை மன்னியுங்கள். நீங்கள் தப்பிப் பிழைப்பதை நான் குறுக்கே நின்று மறிக்கவில்லையே! தாராளமாகப் போகலாம்'' என்றாள்.

பல்லவ குமாரருக்குக் காலாக்னியையொத்த கோபம் வந்தது. ''அடி பாதகி! சண்டாளி! இதன் பயனை நீ அனுபவிப்பாய்!'' என்று சீறினார். பின்னர் பரஞ்சோதியைப் பார்த்து ''சேனாபதி! இந்த வஞ்சகப் பாதகியின் நோக்கம் இப்போது தெரிந்தது. கள்ள பிக்ஷுவிடம் நம்மைக் காட்டிக் கொடுத்துவிட வேண்டும் என்பது இவள் எண்ணம். வாரும் போகலாம்!'' என்றார்.

அப்போது பரஞ்சோதி, ''பிரபு! மன்னிக்க வேண்டும். நான் எல்லாம் கேட்டுக் கொண்டிருந்தேன். ஆயனர் புதல்வி அப்படி வஞ்சகம் செய்யக் கூடியவர் அல்ல. தான் செய்த சபதத்தை முன்னிட்டுத்தான் 'வர மாட்டேன்' என்கிறார்...'' என்பதற்குள்ளே, மாமல்லர் குறுக்கிட்டார். ''தளபதி பெண்களின் வஞ்சகம் உமக்குத் தெரியாது. சபதமாம், சபதம்! வெறும்பொய்! வாதாபிச் சக்கரவர்த்தியின் மாளிகையை விட்டு வருவதற்கு இவளுக்கு விருப்பமில்லை. வாரும் போகலாம்!'' என்று மாமல்லர் சேனாபதியின் கையைப்பற்றி இழுக்கத் தொடங்கினார்.

தளபதி பரஞ்சோதி நகராமல் நின்றார். ''பிரபு! இது நியாயமல்ல. சிவகாமி அம்மையை இங்கு விட்டுப் போவது பெரும் பிசகு!.... அவராக வருவதற்கு மறுத்தால், நாம் பலவந்தமாகத் தூக்கிக் கொண்டு போக வேண்டியதுதான்!....'' என்றார்.

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் சிவகாமியின் தேகமெல்லாம் சிலிர்த்தது. ஒரு சமயம் மாமல்லர் தன்னை விஷநாகம் தீண்டாமல் கட்டிக் காத்ததாகக் கனவு கண்டதைப் பற்றிச் சொன்னது அவளுக்கு நினைவு வந்தது. 'அந்தக் கனவு இப்போது மெய்யாகாதா? சேனாதிபதியின் யோசனைப்படி மாமல்லர் தன்னை நெருங்கி வந்து கட்டிப் பிடித்துத் தூக்கிக் கொண்டு போக மாட்டாரா?' என்று எண்ணினாள். ஆகா! அம்மாதிரி மாமல்லர் செய்திருந்தால், பின்னால் எவ்வளவு விபரீதங்கள் நேராமல் போயிருக்கும்!

விதிவசத்தினால் மாமல்லர் அவ்வாறு செய்ய மனங்கொள்ளவில்லை.

''வேண்டாம், சேனாபதி! வேண்டாம். இஷ்டமில்லாத பெண்ணை நாம் பல



வந்தப்படுத்தி அழைத்துப் போக வேண்டியதில்லை. இவளுக்கு நான் கொடுத்த வாக்குறுதியை ஒரு சமயம் நிறைவேற்றுவேன். பிறகு இஷ்டமானால் வரட்டும். அது வரையில் அந்தக் கள்ள பிக்ஷுவையே கட்டிக்கொண்டு அழட்டும்!.....'' என்று மாமல்லர் சொல்லிக் கொண்டிருக்கும் போது சத்ருக்னனும் குண்டோதரனும் உள்ளே ஓடோடியும் வந்தார்கள்.

''பிரபு! பிக்ஷு வீதி முனையில் வரு



கிறார். அவருடன் வந்த வீரர்களில் பாதிப் பேர் வீட்டின் கொல்லைப் பக்கமாகப் போகிறார்கள்!" என்று சத்ருக்னன் மொழி குளறிக் கூறினான்.

பரஞ்சோதி மறுபடியும் சிவகாமியின் பக்கம் நோக்கிப் பரபரப்புடன், "அம்மா!...." என்றார்.

"வேண்டாம், தளபதி! வேண்டாம். இந்தக் கிராதகி நம்மைக் கள்ள பிக்ஷுவிடம் காட்டிக் கொடுக்கத்தான் பார்க்கிறாள்! வாரும் போகலாம்!" என்று மாமல்லர் இரைந்து கூறிப் பரஞ்சோதியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அம்மாளிகையின் பின்புறமாக விரைந்தார். அடுத்த கணம் அவர்கள் நால்வரும் சிவகாமியின் பார்வையிலிருந்து மறைந்தார்கள்.

## ஐம்பத்தைந்தாம் அத்தியாயம்

# கத்தி பாய்ந்தது!

மாமல்லர் முதலியோர் சென்ற பக்கத்தைச் சிவகாமி ஒரு கணம் வெறித்து நோக்கினாள். மறுகணம் படீரென்று பூமியில் குப்புற விழுந்தாள்.

அவளுடைய தேகத்தை யாரோ கட்புலனாகாத ஒரு மாய அரக்கன் முறுக்கிப் பிழிவது போலிருந்தது. உடம்பிலுள்ள எலும்புகள் எல்லாம் நறநறவென்று ஒடிவது போலத் தோன்றியது.

அவளுடைய நெஞ்சின் மேல் ஒரு பெரிய மலையை வைத்து அமுக்குவது போலிருந்தது.

அவளுடைய குரல்வளையை ஒரு விஷநாகம் சுற்றி இறுக்குவது போலத் தோன்றியது.

ஒரு கணம் சுற்றிலும் ஒரே இருள் மயமாக இருந்தது.

மறுகணம் தலைக்குள்ளே ஆயிரமாயிரம் மின்னல்கள் பாய்ந்தன.

வீடும் விளக்கும் அவளைச் சுற்றிக் கரகரவென்று சுழன்றன.

கீழே கீழே கீழே இன்னும் கீழே அதலபாதாளத்தை நோக்கிச் சிவகாமி விழுந்து கொண்டிருந்தாள். ஆகா! இப்படி விழுவதற்கு முடிவே கிடையாதா? என்றென்றைக்கும் கீழே கீழே போய்க் கொண்டிருக்க வேண்டியதுதானா?

"சிவகாமி! சிவகாமி!" என்று எங்கேயோயிருந்து யாரோ அழைத்தார்கள். அது மாமல்லரின் குரல் அல்ல; நிச்சயம்.

முகத்தின் அருகே நாகப்பாம்பு சீறுவது போல் சத்தம் கேட்டது. உஷ்ணமான மூச்சு முகத்தின் மீது விழுந்தது.

சிவகாமி கண்களைத் திறந்தாள். ஐயோ! படமெடுத்தாடும் சர்ப்பத்தின் முகம்! தீப்பிழம்பாக ஜொலித்த பாம்பின் கண்கள்!

இல்லை; இல்லை! நாகநந்தி பிக்ஷுவின் முகம். அவர் மூச்சுவிடும் விஷக் காற்றுத்தான் தன்னுடைய முகத்தின் மேல் படுகிறது.

சிவகாமி ஒரு பெரும் பிரயத்தனம் செய்து பளிச்சென்று எழுந்து உட்கார்ந்தாள். பிக்ஷுவை விட்டு விலகிச் சற்றுத் தூரத்துக்கு நகர்ந்து சென்றாள். அவள் தேகமெல்லாம் படபடத்து நடுங்கியது.

நாகநந்தி அவளைக் கருணையுடன் பார்த்து, "பெண்ணே! உனக்கு என்ன நேர்ந்தது? என்ன ஆபத்து விளைந்தது! ஏன் அவ்வாறு தரையிலே உணர்வற்றுக் கிடந்தாய்? பாவம்! தன்னந் தனியாக இந்தப் பெரிய வீட்டில் வசிப்பது சிரமமான காரியம்தான். உன்னுடைய தாதிப் பெண்ணைக் காணோமே? எங்கே போய் விட்டாள்!...." என்று கேட்டவண்ணம் சுற்று முற்றும் பார்த்தார்.

அப்போது அவர் பார்த்த திக்கில் மாமல்லர் போகும் அவசரத்திலே விட்டு விட்டுப்போன தலைப்பாகையும் அங்கவஸ்திரமும் கிடப்பதைச் சிவகாமி பார்த்துப் பெருந்திகிலடைந்தாள். நாகநந்தி அவற்றைக் கவனியாமல் திரும்பிச் சிவகாமியின் அருகில் வந்து, "பெண்ணே! நான் சொல்வதைக் கேள். உன்னுடைய நன்மைக்காகவே சொல்லுகிறேன்!" என்று சொல்லிய வண்ணம் சிவகாமியின் ஒரு கரத்தைத் தன் இரும்பையொத்த கரத்தினால் பற்றினார்.

அப்போது சிவகாமியின் உடம்பு மறுபடியும் நடுங்கிற்று. கொடிய கண்களையுடைய நாக சர்ப்பம் படமெடுத்துத் தன்னைக் கடிக்க வருவது போன்ற பிரமை ஒரு கணம் ஏற்பட்டது. சட்டென்று சமாளித்துக் கையை வெடுக்கென்று எடுத்துக் கொண்டாள்.

"ஆ! சிவகாமி! ஏன் இப்படி என்னைக் கண்டு நடுங்குகிறாய்? உனக்கு நான் என்ன தீங்கு செய்தேன்! உன்னிடம் உண்மையான

அபிமானம் கொண்டதல்லாமல் உனக்கு நான் ஒரு தீங்கும் செய்யவில்லையே! உன் தந்தையின் உயிரைக் காப்பாற்றியதன்றி வேறொரு அபசாரமும் உனக்குச் செய்ய வில்லையே? ஏன் என்னை வெறுக் கிறாய்?'' என்று பிக்ஷு கனிவு ததும்பும் குரலில் கேட்டார்.

''சுவாமி! தங்களைக் கண்டு நான் பயப் படவும் இல்லை. தங்களிடம் எனக்கு வெறுப்பும் இல்லை. தாங்கள் எனக்கு என்ன தீங்கு செய்தீர்கள், தங்களை நான் வெறுப்பதற்கு? எவ்வளவோ நன்மைதான் செய்திருக்கிறீர்கள்!'' என்றாள் சிவகாமி.

''சந்தோஷம், சிவகாமி! இந்த மட்டும் நீ சொன்னதே போதும். உன் தேகம் அடிக்கடி நடுங்குகிறதே, அது ஏன்? உடம்பு ஏதேனும் அசௌக்கியமா?'' என்று வினவி னார்.

''ஆம், அடிகளே! உடம்பு சுக மில்லை!'' என்றாள் சிவகாமி.

''அடடா! அப்படியா? நாளைக் காலை யில் நல்ல வைத்தியனை அனுப்புகிறேன். ஆனால், இப்படி உடம்பு அசௌக்கியமா யிருக்கும் போது உன்னை விட்டு விட்டு உன் தாதிப்பெண் எங்கே போனாள்? எங்கேயாவது மூலையில் படுத்துத் தூங்கு கிறாளா, என்ன?'' என்று அங்கு மிங்கும் சுற்றிப் பார்த்தார் பிக்ஷு.

சற்றுத் தூரத்தில் தூணுக்குப் பின்னால் கிடந்த தலைப்பாகையும் அங்கவஸ்திரமும் இப்போது அவருடைய கண்களைக் கவர்ந் தன.

''ஆ! இது என்ன இங்கே யாரோ வந்திருக்கிறார்கள் போலிருக்கிறதே?'' என்று அருகில் சென்று உற்றுப் பார்த்தார்.

திரும்பிச் சிவகாமியை நோக்கி, ''சபாஷ்! சிவகாமி! அதற்குள்ளே இங்கே உனக்குக் காதலர்கள் ஏற்பட்டு விட்டார் களா? உள்ளூர் மனிதர்கள்தானா! அல்லது வெளியூர்க்காரர்களா?'' என்று பரிகாசச் சிரிப்புடன் கேட்டார். சிவகாமி மௌன மாய் நின்றதைப் பார்த்துவிட்டு, ''நல்லது; நீ மறுமொழி சொல்ல மாட்டாய். நானே போய்க் கண்டு பிடிக்கிறேன்!'' என்று சொல்லிவிட்டு வாசலை நோக்கிச் சென் றார்.

அப்போது சிவகாமிக்கு, ''இவன் புத்த பிக்ஷுவிடம் நம்மைக் காட்டிக் கொடுக்கப் பார்க்கிறான்!'' என்று மாமல்லர் சொன்னது நினைவு வந்தது. பவிச்சென்று பிக்ஷு அவர்களைக் கண்டுபிடிப்பதால் நடக்கக் கூடிய விபரீதங்கள் எல்லாம் நினைவுக்கு வந்தன.

சிவகாமி துடிதுடித்து அங்கு மிங்கும் பார்த்தாள். இளவரசரின் அங்கவஸ்திரத் துக்கு அடியில் ஏதோ பளபளவென்று ஒரு பொருள் தெரிந்தது.

சிவகாமியின் கண்களில் விசித்திரமான ஒளி தோன்றியது.

பாய்ந்து சென்று அந்தப் பொருளை எடுத்தாள். அவள் எதிர் பார்த்தது போல் அது ஒரு கத்திதான்.

சிவகாமி அடுத்த கணம் அந்தக் கத்தியைப் புத்த பிக்ஷுவின் முதுகை நோக்கி எறிந்தாள்.

பிக்ஷு 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு விழுந்தார்.

முதுகில் கத்தி பாய்ந்த இடத்திலிருந்து இரத்தம் கசிந்தது.

சிவகாமியைப் பிக்ஷு திரும்பிப் பார்த்து, இரக்கம் ததும்பிய குரலில், ''பெண்ணே! என்ன காரியம் செய்தாய்? உன்னை உன் காதலன் மாமல்லனிடம் சேர்ப்பித்து விடலாமென்று எண்ணியல்லவா அவசரமாகக் கிளம்பினேன்?'' என்றார்.

(தொடரும்)



''அவர் ரொம்ப லஞ்சம் வாங்குவார் போலிருக்கு....!''

''எப்படித் தெரிஞ்சது?''

''Something is better than nothing'' என்று தலைக்கு மேலே போர்டு எழுதி வெச்சிருக்கார்.''

- ராதா வாசுதேவன்

''இன்னும் அரை மணி நேரத்துல படம் முடியப் போகுதுன்னு சொல் றீங்களே, ஏற்கெனவே ஒரு தடவை பார்த்துட்டீங்களா?''

''ஊகூம்; ஃபேன் எல்லாத்தையும் ஆஃப் பண்ணிட்டாங்களே, அதை வெக்கச் சொல்றேன்!''

- சீர்காழி. வி. ரேவதி



# நியாயங்கள்




ஏறத்தாழ ஒரு மணி நேரமாக அந்தக் கூத்து நடந்து கொண்டிருக்கிறது.

நான்கு திசைகளிலிருந்து வந்து சேரும் சாலைகளின் சந்திப்பான அந்த நாற்சந்தியின் நட்ட நடுவில் நின்று கொண்டு, நீண்ட நேரமாக அவன் அப்படியொரு ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருக்கிறான்.

''டேய்.... எவனாயிருந்தாலும் சரி.. இப்ப வாடா... இதோ என்னோட சைக்கின் ரோட்டிலேதான் போட்டிருக்கேன்... தைரியமிருந்தா வந்து தொட்டுப் பாருடா. அப்படித் தொடறவன் குடலை உருவி மாலையாப் போட்டுக்கல்லே எம்பேரு மாரிமுத்து இல்லே... எவண்டா வர்றான்....?''

இவைதான் அவன் பேசியவற்றின் சாராம்சம். ஆனால் அவன் குடித்திருந்ததால் அந்த வார்த்தைகளின் ஒலி வடிவங்கள் கோணல் மாணலாகச் சிதில மடைந்து குழறிக் குழறி வெளியே வந்து விழுந்தன.

இப்படி ஆடிக் கொண்டிருந்தவன் திடீர் திடீரென்று நடுச் சாலையில் வந்து விழுவான். இதனால் போக்குவரத்து, பெரிதும் பாதித்துக் கொண்டிருந்தது.

இத்தனை ரகளைகள் நடந்தும், அந்த நான்கு சாலைகளிலும் முன்புறம் நெடுஞ்சாலைத்துறை நிலத்தில் கொஞ்சமும், பின்புறம் ஓடிக் கொண்டிருக்கும் வாய்க்கால் புறம்போக்கில் கொஞ்சமும் தூர்த்துச் சின்னச் சின்னக் கொட்டகை போட்டு டீக் கடை, மளிகைக் கடை, லாட்டரி சீட்டுக் கடை என்று சுமார் இருபத்தைந்து கடைகள் வைத்து இருக்கும் எந்தக் கடைக் காரரும், அல்லது உள்ளூர்க்காரர் எவரும் அந்தக் 'குடிமகன்' நடத்தும் கூத்தைக் கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. அவரவர் வேலையில் கர்மசிரத்தையுடன் ஈடுபட்டிருந்தனர்.

'பாம்பே டீ ஸ்டாலில்' சிவப்புக் கலரில் முண்டா பனியன் போட்டுக் கொண்டு 'சர்....சர்...' என்று எந்நேரமும் சுறுசுறுப்பாக ஒருவித தாள லயத்துடன் டீ அடித்துக் கொண்டிருக்கும் கந்தவேல் எப்போதுமே கொஞ்சம் துடிப்பானவன். 'நமக்கெதுக்கு ஊர் வம்பு?' என்ற நினைப்பு அதிகம் வராதவன்.

மாரிமுத்துவின் இந்த ஓட்டியை இனிமேலும் பொறுக்க முடியாது என்று நினைத்தவனாய் ''எலே... மாரிமுத்து! இப்ப பேசாம கடையிலே போயி உக்காரப் போறியா.... இல்ல ஒதை வேணுமா?''

என்று டீ ஸ்டாலில் இருந்து ஆத்திரமாய்க் கீழே இறங்கினான். ஆனால் அவனது அண்ணன் குறுக்கே ஓடிவந்து தடுத்து நிறுத்தினார்.

''டேய்... கந்தவேலு... முதல்லே ஸ்டால்ல ஏறுடா... அந்த நாய் கத்துனா உனக்கென்னடா வந்துச்சு? நம்ப பொழப்பைக் கவனிப்பியா....? அதை உட்டுட்டு... வரிஞ்சு கட்டிட்டுக் கிளம்பிட்டான், வலுச் சண்டைக்கு.....''

கந்தவேல் அண்ணன் சொல் மீறியறியாதவன். ஊமையாய் ஸ்டாலில் ஏறி மறுபடியும் டீ ஆற்றுவதில் மூழ்கிப் போனான்.

கிழக்கே நாகப்பட்டினத்திலிருந்து வந்த 'சோழன்' நாலு ரோடு நிறுத்தத்தில் நின்றான். அதிலிருந்து கீழே இறங்கிய அந்த ஊர் முன்னாள் பஞ்சாயத்துத் தலைவர் சாமிக்கண்ணு தடுமாறிக் கொண்டிருந்த 'குடிமகன்' மாரிமுத்துவைப் பார்த்தார்.

'என்ன இவன்.. நட்ட நடு ரோட்டிலே நின்னுக்கிட்டு இப்படி அலம்பல் பண்றான்....?' என்று நினைத்துக் கொண்டே பாம்பே டீ ஸ்டாலுக்குள் நுழைந்தார்.

''ஏண்டா கந்தவேலு.... என்னடாது கூத்து?'' தலைவர் கேட்டதும் கந்தவேலு கடகடவென்று கொட்டித் தீர்த்தான்.

# உத்தம சோழன்

''வேறொன்னுமில்லேண்ணே.... நேத்து இவன் கடைக்கு முன்னாடி நடு ரோட்டிலே இவன் தம்பி சைக்கிளை நிறுத்தி வைச்சிட்டு எங்கேயோ போயிட்டான். அந்த இடத்தில் ரோடு ஒடுக்கமா இருந்ததாலே, நெல்லு ஏத்திக்கிட்டு வந்த லாரி ஒண்ணு சைக்கிள் மேலே சடாருன்னு மோதிட்டுது. ஏற்கெனவே துருப்பிடிச்சுப் போன அந்தப் பழசான சைக்கிளோட பேக் வீலு நறநறன்னு நொறுங்கிப் போச்சு... உடனே லாரியை நிறுத்திட்டு டிரைவர் கீழே குதிச்சுட்டாரு. அவரு அப்பத்தான் வண்டியிலே ஏறியிருக்கிறாரு... தெரிஞ்ச மனுஷன்தான். வண்டியை எப்போதுமே விரட்ட மாட்டாரு... சரின்னு எல்லாருமாச் சேர்ந்து ஒரு அம்பது ரூபாயை வாங்கி இவன் தம்பிக்கிட்ட கொடுத்துட்டு லாரிய அனுப்பிச்சுட்டோம். காலையிலேதான் இந்தப் பயல் வந்திருக்கான். வந்ததும் ஐம்பது ரூபாயை எதுக்குடா வாங்கினே....? நாக்கை வழிக்கறதுக்கான்னு சண்டை போட்டுட்டு எங்கிட்ட வந்து எதுக்குடா லாரியை விட்டீங்கன்னு சத்தம் போட்டான்....''

''ஹாங்...?''

''அதுக்கு அண்ணன்தான் சொன்னாரு.... 'சரிதான் போடா... பெரிசா கேக்க வந்துட்டான்.. உந்தம்பியை எவண்டா நடுரோட்டிலே சைக்கிளை நிறுத்தச் சொன்னான். அப்படி ரோட்டிலே போட்டா போறவன் வாறவன் அப்படித்தான் இடிப்பான்'னு. அவ்வளவுதான்.. உடனே எங்கேயோ போயி 'போட்டுக்கிட்டு' வந்து இதே மாதிரி 'இப்ப என்னோட சைக்கிள் நடு ரோட்டிலே கிடக்கு. எவனாவது தொடுங்க பாக்கலாம்'னு திரும்ப திரும்பச் சொல்லிக்கிட்டு, ரொம்ப நேரமா அலம்பல் பண்ணிக்கிட்டு நிக்கிறான். ரோட்டுலே போறவர்ற ஜனங்களுக்கும் மத்ததுங்களுக்கும் எவ்வளவு இடைஞ்சல்ங்கிறீங்க..... 'டேய் சும்மா இருக்கப் போறியா இல்லையா'ன்னு நான் அதட்டப் போனா அண்ணன் என்னை அதட்டறாரு.... அண்ணன் சொல்றதைக் கேட்டுக்கிட்டு எல்லாக் கடைக்காரங்களும் 'சாக்கடையிலே எதுக்குக் கல்லை எறியணும்... அப்புறம் அது மேலே தெறிக்கட்டுதேன்னு நொந்துக்கணும்' சொல்லிட்டு அவங்கவங்களும் அவங்கவங்க வேலையைப் பாத்துக்கிட்டிருக்காங்க.''

பஞ்சாயத்துத் தலைவர் முகம் சுளித்தார். கந்தவேலின் அண்ணனைப் பார்த்தார்.

''ஏண்ணே.... தெரியாமத்தான் கேக்குறேன்... இவன் இப்படி ரோட்டுலே கூத்தடிச்சுக்கிட்டிருந்தா நமக்குத்தானே அசிங்கம்... அட அத விடுங்க.... நம்ப வீட்டுப் பிள்ளைங்களோ, பெண்டுகளோ இப்ப இங்க வர்றாங்கன்னு வச்சுக்குங்க... இவனைப் பார்த்துப் பயந்து குறுக்கே நெடுக்க ஓடறப்ப லாரியிலோ பஸ்ஸிலோ மாட்டிக்கிட்டா என்ன ஆகிறது. சில விஷயங்களை நமக்கென்னன்னு கண்டுக்காம விட்டா, கடைசியிலே அதுதான் நமக்கு இடைஞ்சலா முடிஞ்சுடும்.''

தலைவர் சாமிக்கண்ணுவின் குரல் கொஞ்சம் உச்சத்தில் ஒலிக்கவே, அக்கம் பக்கத்துக் கடைக்காரர்களும் சேர்ந்து கொண்டார்கள். சாமிக்கண்ணு சொல்வதில் நியாயம் இருப்பதுபோல் அவர்களுக்குத் தோன்றியது. முடிவாக கூப்பிடு தூரத்தில் இருந்த போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய்ப் புகார் தெரிவித்தார்கள்.

சற்று நேரத்திற்கெல்லாம் ஒரு போலீஸ்காரர் வந்து ''மாரிமுத்து....' உன்னை ஐயா அழைக்கக்கிட்டு வரச் சொன்னாரு....'' என்றார்.

''அவன் யாருடா... எனக்கு ஐயா.....?'' என்று முரண்டுபிடித்தான் மாரிமுத்து.



''மூட்டைப்பூச்சிக் கடியிலிருந்து உன்னைக் காப்பாற்றிட்டேன் பார்த்தியா!''

---

இதமான உபாயங்கள் பயனற்றுப் போகவே, பொறுமையிழந்து போன போலீஸ்காரர் அவன் பிடரியில் கை வைத்து மாரிமுத்துவை ஸ்டேஷனுக்கு தள்ளிக் கொண்டு போனார்.

**மா**ரிமுத்துவை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போன விவகாரம் அவன் வீட்டினருக்குத் தெரிந்து, அவர்கள் வந்து அவனை மீட்டுச் செல்வதற்குள் பொழுது போய்விட்டது.

இரவு எல்லோரும் கடை கட்டும் நேரத்தில் மாரிமுத்துவின் மைத்துனன் கோவிந்தசாமி பாம்பே டீ ஸ்டாலில் நுழைந்தான்.

கந்தவேலுவின் அண்ணன் எதிரே உட்கார்ந்து கொண்டான்.

''ஏண்ணே... இது உங்களுக்கே நல்லாயிருக்கா... அந்த மாரிமுத்து யாரு....? உங்க அண்ணன் தம்பி மாதிரிதானே... இந்தக் கடைத் தெருவிலே உங்களை மாதிரி அவனும் ஒரு கடை வச்சிருக்கான்தானே... அவன்தான் ஏதோ புத்திக் கெட்டுப் போயி தகராறு பண்ணினான்னா நீங்க அவன் கன்னத்திலே ரெண்டு அறை கொடுத்து, 'போடா நாயே வீட்டைப் பாக்க'ன்னு சொல்றதை விட்டுட்டு அந்த பஞ்சாயத்துத் தலைவர் சாமிக்கண்ணு பேச்சைக் கேட்டுக்கிட்டு நீங்களும் சேந்துக்கிட்டு எம் மச்சான போலீஸ் ஸ்டேஷனுக்கு அனுப்பிச்சிட்டீங்களே...... இது நியாயமா?''

''அதில்லப்பா... வந்து....''

கோவிந்தசாமி அவரைப் பதில் சொல்ல விடவில்லை.

''பஞ்சாயத்துத் தலைவர் தேர்தல்லே எனக்கும் சாமிக்கண்ணுக்கும் போட்டி. அந்த ஆத்திரம் அவனுக்கு. இந்தச் சந்தர்ப்பத்தை அதனால பயன்படுத்திக்கிட்டான். எம் மச்சினனை அவமானப் படுத்தினா என்னையே அவமானப்படுத்துற மாதிரின்னு நினைச்சுக்கிட்டு உங்களையெல்லாம் உசுப்பி விட்டிருக்கான்... நீங்களும் ஆமான்னுட்டீங்க....''

கேட்டுக் கொண்டிருந்த கந்தவேலுவின் அண்ணனுக்கு மட்டுமல்ல, கந்தவேலுக்குக் கூட கோவிந்தசாமி சொல்வதில் ஏதோ உண்மை இருப்பதுபோல் தோன்றியது.

''சரி... யார் பேச்சையோ கேட்டுக்கிட்டு இன்னிக்கு அவன் ஏதோ குடிச்சுட்டுத் தடுமாறிட்டான்னு கையைக் கட்டிக் கழுத்துலே கைவச்சுத் தள்ளிட்டுப் போனாங்க. அவன் யாரு....? அவன் ஒரு கடைக்காரன்... ஒரு கடைக்காரன் அவமானப்பட்டா அதுலே மற்ற கடைக்காரனுக்கு அவமானமில்லையா? சரி... இதை இப்படியே விட்டுடறோம். நாளைக்கு மளிகைக் கடை குப்புசாமி, உப்பு மூட்டையை ரோட்டுக்கு இடைஞ்சலா வச்சிருந்தாருன்னு பொடரியிலே கைவச்சு போலீஸ் தள்ளிக்கிட்டுப் போனா என்ன ஆகும்? இன்னிக்கு மாரிமுத்துக்கு.. நாளைக்கு நமக்குன்னு நினைக்க வேண்டாமா? ''

**ம**றுநாள் மதியம்...

வயர்லெஸ்ஸில் சப் இன்ஸ்பெக்டரைக் கூப்பிட்டு இன்ஸ்பெக்டர் சத்தம் போட்டார்.

''என்ன மிஸ்டர் நீ.....? மாரிமுத்துங்கிற ஆளை எவனோ சொன்னான்னு கேட்டுக்கிட்டு நடுரோட்டிலே கையைக் கட்டி இழுத்துட்டுப் போயி அவமானப்படுத்திட்டியாமே....!''

சப் இன்ஸ்பெக்டர் திடுக்கிட்டுப் போனார்.

''இல்லே சார்... ..அவன் குடிச்சுட்டு நடுரோட்டிலே பப்ளிக்குக்கு இடைஞ்சலாத் தகராறு பண்ணிக்கிட்டிருந்தான். கடைக்காரங்களும் மத்தவங்களும் வந்து சொன்னாங்க சார்.''

''எந்த பப்ளிக்யா...? போலீஸ் அராஜகம்... அப்பாவி வியாபாரியை அவமானப்படுத்திய போலீஸ் மீது நடவடிக்கை எடுன்னு நாளைக்கு ஸ்டேஷன் வாசல்லே 'நாலு ரோடு வியாபாரிகள் சங்கம்' உண்ணாவிரதம் இருக்கப் போறதா நோட்டீஸ் அடிச்சிருக்காங்க.... எங்கிட்டேயும் நேரில் வந்து சொன்னாங்க... ஒரு தனிப்பட்ட ஆளுக்காக இவ்வளவு பேர் ஒண்ணு திரண்டு வந்தா ஏதோ நீ வரம்பு மீறி நடந்திருக்கேன்னுதான் அர்த்தம். என்ன பண்ணுவியோ... ஏது செய்வியோ எனக்குத் தெரியாது... நாளைக்கு உண்ணாவிரதம் இருக்கக்கூடாது... அவ்வளவுதான் எனக்கு வேண்டியது....'' என்று இன்ஸ்பெக்டர் கட்டளையிட்டபோது, சப் இன்ஸ்பெக்டர் முகம் சிறுத்துப் போனது.

# எதனைப் பாடவோ?



காதோரக் குழலாடக் கண்விழிகள் ஊடாடக்
கன்னியுடன் மனமும் ஆட
கலையாத முகில்சூழ்ந்த நிலவாக முகம்காட்டும்
கனவுலக தேவதை யையா?
போதாத துகிலாக முகில்மூடி நிலம்நிற்கும்
பொன் முகடு மலைக ளினையா?
புலவோர்க்கும் பண்காட்டிப் புதிதாக இசைசேர்க்கும்
புட்கள்தரும் பாடல் களையா?
ஆகாயத் திரைமீது தூரிகையாற் கோலங்கள்
ஆக்கிவரும் வான்ம களையா?
அழலான கதிரவனை நிழலாகப் பின்தொடரும்
அழகொழுகும் நிலவு தனையா?
வாடாத நுரைப்பூவில் ஆசையினால் பாட்டெழுதி
வளரலையைத் தூது விட்டு
வரு(ம்)அலையின் பதில் நோக்கி மௌனத்தில் மனம்விம்மும்
வாரிதியின் காத லினையா?
காடாக - நதியாகக் - கண்மயங்கும் பூவாகக்
கனிந்தொளிரும் இயற்கை யினையா?
கதைபேசி நடைபோடும் இளமதலை கைதூக்கிக்
களித்திருக்கும் வரங்க ளினையா?
ஏடோடு மனதாட எண்ணங்கள் நூலாக
இதயத்து ஊஞ்ச லேறி
இவ்வுலகில் இன்பமெனக் கண்டவைகள் பலகோடி!
எதனைமுதல் பாடி வரவோ?

- கலாரவி

பொன்விழா போட்டிக் கவிதை

''என்னங்க, இவ அசையமாட்டா போலிருக்கே!''

மனம்பூராவும் வருத்த நிரப்பலுடன் கணவனிடம் முறையிட்டாள் ஜெயா.

''விவரமான பொண்ணுன்னு நினைச்சோம். இப்படி அவ சுத்தமாவே விவரம் இல்லாமப் போய்ட்டாளே!''

ராஜசேகரனும் வருத்தம் காண்பித்தார்.

''விட்ற முடியுமாங்க? எப்படியும் லலிதாவோட மனசை மாத்திக் காட்டணும். இல்லேன்னாப் பட்டபாடெல்லாம் வீணால்ல போயிரும். முன்னே அவளைச் சம்மதிக்க வைக்கிறதுக்கும் பெரும்பாடு தான். இப்பவும் அதே மாதிரிதான் பாடுபட வேண்டியதிருக்கு.''

''இப்படித் தலை கீழாய் மாறிடும்ன்னு நாம எதிர் பார்க்கவே இல்லே. லலிதா, செல்வச் செழிப்போட ஓகோன்னு வாழ்வான்னு நினைக்கத்தான் செய்து வச்சோம்.

# நிஜ நிழல்

லக் இல்லே.''

''அப்படிச் சொல்லாதீங்க. இவகிட்டே அட்ஜஸ்ட் பண்ணிக்கிற பக்குவம் இல்லே. என்ன, ஊர் உலகிலே இல்லாததையா அவன் பண்ணிட்டிருக்கான்? பொதுவா எல்லாப் பணக்காரங்கிட்டேயும் இருக்கிற வீக்னெஸ்தான் இது. இவ என்னன்னா அதையே பெரிசு பண்ணிக்கிட்டு இப்படி ஒரேயடியாத் திருகுதாளம் போடுறா.''

''நம்மை மாதிரி அவ கஷ்டப்படாம செல்வ வளத்துல மிதக்கணும்னுதான் நாம அவளுக்கு அவனைப் பண்ணி வச்சோம். நினைச்சுப் பார்க்கவே முடியாத அளவுக்குப் பெரும்பணக்காரன் அவன். அவனை அட்ஜஸ்ட் பண்ணிட்டுப் போயிருந்தான்னா, இன்னும் ஏழுதலைமுறைக்கும் கவலையே வராது. இவ என்னன்னா....''



மறுபடியும் நம்ம தோள்லயே உட்காரு வேன்னுட்டு வந்து உக்காந்திட்டா, சுமை இறக்கம்ன்னு நினைச்சோம். இப்பல்ல அதிகமாயிருக்க. கேட்கிறவங்க கிட்டப் பதில் சொல்லவே முடியலே. நம்மைக் குத்தம் சொல்றாங்க. ஒரு நல்ல பையனாப் பார்த்துக் கட்டி வைக்காம இப்படி ஒருத்தன் கையில பிடிச்சுக் குடுத்து நாசம் பண்ணிட்டிங்களே அவளோட வாழ்க்கையைன்னு ஊசி மாதிரி குத்திக் குத்திக் கேட்டு வேதனைப்படுத்துறாங்க....''

''சரி, நம்ம சொல் கேட்டு ஒண்ணா இருந்து வாழத்தான் முடியலே அவளாலே. இப்பவாச்சும் நம்ம சொல் கேட்டு ஜீவனாம்சம் கேட்கலாமில்லே. நல்ல வசமான ஆளு. தாராளமாவே தருவான். இவ மாட்டேன் மாட்டேன்னு தலையை ஆட்டுறாளே....''

''சரி... இன்னும் ஒரு வாட்டி சொல்லிப் பார்க்கலாம். கேட்கிறாளா இல்லியான்னு பாத்துடலாம்.''

''என்னவோ நம்பிக்கை வ ர லே. இருந்தாலும் முயற்சி பண்ணிப் பார்ப்பமே.....''

உமா கல்யாணி



மனம் நிறைய அவநம்பிக்கையோடு தான் லலிதாவின் அறையை நோக்கி நடந்தார்கள் ஜெயாவும், ராஜசேகரனும்.

'எதுக்கு இப்படி ஜோடி போட்டு வந்து நிக்கிறீங்க?' என்கிற வினாவைப் பார்வையில் வைத்துப் பெற்றவர்களை ஏறிட்டுப் பார்த்தாள் லலிதா.

அவளின் கரம், அனிச்சையாகப் படித்துக் கொண்டிருந்த வார இதழை மூடி வைத்தது.

'எதுக்கு வந்திருக்கோம்னு தெரியாதா உனக்கு? இப்ப நம்மகிட்ட உள்ளதே உன்னோட அந்தப் பிரச்னை ஒண்ணு தானே!' என்று பார்வையாலேயே பதில் கூறிவிட்டு அவளின் எதிரே இருவரும் அமர்ந்து கொண்டனர்.

ஓரிரு நிமிடங்கள் சங்கடமாய் நெளிந்து நகர்ந்த பின், லலிதாவே அம்மாவை நோக்கி, ''என்னம்மா விஷயம்?'' என்று கேட்டாள்.

''இப்ப வேற என்ன விஷயம் இருக்குது பேச. எல்லாம் உன் பிரச்னைதான். அவ னோட அட்ஜஸ்ட் பண்ணி வாழ முடியா துன்னுட்டே. அப்புறம் என்னதான் வழி? நீ வாழ வேண்டாமா?''

> ''மூணு வேளை
> சாப்பாடு, துணி
> மணிங்க...
> இதுகளுக்கும் மேலே
> மனசுன்னும் ஒண்ணு
> இருந்து
> தொலைக்குதே....''

''இப்ப நான் என்ன வாழாமலா போய்ட்டேன்?''

''இது... இது... வாழ்க்கையாடி!''

''அந்த ஆளோட வாழ்றதவிடவும் இது பெட்டர்தான். அந்த ஆள் வீட்ல பெண் டாட்டின்னு வாழ்றதும், இங்கே நம்ம வீட்ல வாழாவெட்டின்னு இருக்கிறதும் என்னைப் பொறுத்தவரைக்கும் ஒண்ணு தாம்மா. எனக்கு அங்கே பெண்டாட்டிங்கிற லேபிளைத் தவிர வேறு என்ன உரிமை உண்டு? என் சொல் எந்தக் காரியத்துலயும் எடுபடாது. மூணு வேளை சாப்பாடு, துணி மணிங்க... இதெல்லாம்தான் ஒருத்தியோட தேவைன்னா, என்னோட தேவைகளும் நிறைவு பெற்றிருக்கும். இதுகளுக்கும் மேலே மனசுன்னும் ஒண்ணு இருந்து தொலைக்குதே....''



"பிள்ளையாரப்பா! நான் பரீட்சையில் பாஸ் ஆகும்படி செய். வெயிலுக்கு ஜில்லுன்னு பத்து கப் ஐஸ்கிரீம் வாங்கி வந்து நைவேத்தியம் செய்யறேன்!"



"எங்க புது மானேஜர் ரொம்ப ஸ்ட்ரிக்டா இருப்பார்னு தோணுது."

"எப்படி?"

"அவர் ஜாயின் பண்ணின முதல் நாளே எல்லாரையும் கூப்பிட்டு, 'தினமும் ஒரு மணி நேரத்துக்கு மேல யாரும் லேட்டா வரக்கூடாது'ன்னு கண்டிக்கச் சொல்லிட்டாரே!"

- சீர்காழி வி. ரேவதி



"உங்க மானேஜர் கையில லஞ்சக் கவரைக் கொடுத்ததும் ஸ்பாஞ்சைக் கையில எடுக்கிறாரே, ஏன்?"

"லஞ்சப் பணம் வெளியிட்டா இல்லேன்னு சிம்பாலிக்காச் சொல்றார்!"

- எஸ். முகம்து யூசுப்

"இது தாற்காலிக விலகலாய் இல்லியே லலிதா. நிரந்தரமான விலகலால்ல போயிருக்க. அதான்...."

"அதுக்காக....?"

"உன்னோட எதிர்காலத்தையும் யோசனை பண்ணணுமில்லியா லலிதா...."

"கத்தி வளைக்க எங்கே வரீங்கன்னு புரியுது. முன்னே என்னன்னா இந்த ஆளையே நான் பண்ணிக்கணும்ன்னு ஒத்துக்காலல நின்னீங்க. இந்த ஆளோட குணாதிசயங்கள் அத்தனையையும் நான் புட்டுப் புட்டு வச்சப்ப எல்லாம், அவரோட பணத்தை மட்டுமே பார்க்கச் சொல்லி வற்புறுத்தினீங்க. கல்யாணம் ஆனா மாறிடுவான்னு சொல்லி என் கழுத்துல தாலியை ஏறவச்சீங்க. அந்த ஆள் மாறலே. மாறவும் மாட்டார். அந்த இம்சை தாங்க முடியாத தப்ப...."

"அதான் நீ ஒத்தக்காலல நின்னு டைவோர்ஸுக்கு வழி வச்சிட்டியே...."

"ஆமாம்மா. ஆனா...., அப்புறமும் நீங்க ஏன் குறுக்கே வரணும்? டைவோர்ஸ்ன்னா என்ன? அந்த ஆளுக்கும் எனக்கும் ஒரு பிணைப்பும் இல்லாமல் பண்றது தானே! ஆனா.... நீங்க சொல்ற ஏற்பாடு காலம் பூராவும் அந்த ஆளோட பிணைப்பு இருக்கிற படி பண்ணணும்கிற மாதிரி இருக்கு...."

"அப்புறம் உனக்கு வழி?"

"எனக்குன்னு ஒரு வழி இனிமேலேயா அமையப்போகுது?"

"அவன் ஒண்ணும் வெறும் ஆள் இல்லே."

"ஆமாம்மா, உலக மகா துஷ்டத்தனங்கள் எல்லாம் ஒண்ணாய் அமைஞ்சவர் தான்!"

"அது எப்படியோ தொலையிறான். போகட்டும். நமக்கு வேண்டியது....."

"அந்த ஆளோட பணம்தான்..., இல்லியாம்மா?"

"நாம்ப ஒண்ணும் இனாமாக் கேக்கல.... உரிமை இருக்கு...."

"மண்ணாங்கட்டி! அந்த ஆளே வேணாம்ன்னுட்டு டைவோர்ஸ் பண்ணப் போறேன். அப்புறம் என்ன உரிமையும் மண்ணாங்கட்டியும்? ஒரு நாள்கூட உண்மையான புருஷனாய் அந்த ஆள் என்கிட்டே நடந்துக்கலே. அப்புறம் எப்படி உரிமை இருக்க முடியும்?"

"தாலியை வாங்கிக்கிட்டிருக்கேல்ல...."

"அதத்தான் கழட்டி அந்த ஆள் மூஞ்சியிலே வீசிடப் போறேனே!"

"கொஞ்ச நாளாச்சும் சுமந்தேல்ல நீ. அதுக்காகவாச்சும்..."

"ஓ. சுமை கூலி கேக்கச் சொல்றீங்களா! தாலிசுமந்த கூலி!...."

''இப்படிப் போகாதே லலிதா. அர்த்தமில்லாத ஏற்பாடுகள் எதையும் பெரியவங்க பண்ணிவைக்க மாட்டாங்க.''

''என்னைப் பொறுத்தவரைக்கும் நீங்க பண்ணச் சொல்ற ஏற்பாடு அர்த்தம் இல்லாததுதாம்மா. ஏதோ என் ஜீவித காலத்துல உண்கிறதுக்கும் உடுக்கிறதுக்கும் ஏற்பாடு பண்றதாய் எண்ணிக்கிட்டு, என் ஜீவித முழுமைக்கும் முள் நிழல்ல கொண்டு போயில்ல நிறுத்தத் துடிக்கிறீங்க!''

''முள் நிழல்லயா?''

''ஆமாம்மா, முள் நிழல்லதான். தரை பூராவும் நெருஞ்சிமுட்களைப் பரப்பி வச்கல்ல நிற்கச் சொல்றீங்க. நிழலான இடம்கிறதுக்காக முள்ளுமேலே நிற்க முடியுமா?''

''லலிதா!''

''ஆமாம்மா, நான் அந்த ஆள்கிட்டேர்ந்து டைவோர்ஸ் கேட்கிறதே, அப்படிப்பட்ட ஒருத்தரை என் மனசிலிருந்தே அப்புறப்படுத்தத்தான். நீங்க என்னன்னா டைவோர்ஸுக்கு அப்புறமும் கூட அந்த ஆளை எங்கிட்டேர்ந்து பிரிக்க முடியாதபடில்ல ஏற்பாடு பண்ணுறதாச் சொல்றீங்க.''

''என்ன லலிதா சொல்றே நீ? டைவோர்ஸ் ஆன பிறகு ஆட்டோமேடிக்கா ரெண்டு பேரும் பிரிஞ்சு தானே வாழப் போறீங்க! இதுல பிரியாம இருக்க என்ன ஏற்பாடு இருக்கு?''

''ஜீவனாம்சம்கிற சங்கிலி. அதை வாங்கி நான் ஜீவிக்கிறப்ப, அது யாரோட நிழல்? என்னாலே வெறுக்கப்படுகிறவருடையது இல்லியா? நான் வெறுக்கிற ஆளோட நிழல், முள் நிழல் இல்லியா? யாரை வேணாம்னுட்டுப் போறேனோ, அவர்கிட்டயா உப்பு வாங்கித் திங்கச் சொல்றீங்க? அப்புறம் எப்படி அது நிஜமான பிரிதல் ஆகும்? நான் சாப்பிடுற சோறு அவர் பணத்துல வாங்கினதுன்னு ஆகிறப்ப, அதை எப்படி நிஜமான பிரிதல்ன்னு சொல்ல முடியும்?''

பேசாமல் நின்றவர்.

''கொளுத்துற வெயிலும் கொடுமைக்காரனோட கை நிழலும் ஒண்ணுதான். எனக்கு நிஜ நிழல்தான் வேணும். அதைத் தேடிக்க என்னாலே முடியும்'' என்று உறுதியோடு சொன்னாள் அவள்.

# காலக் கணக்கு

"மூஞ்சியிலதா எல்லாத்து ஜாதகமும் எழுதி இருக்கே... இதிலென்ன தனியா வேண்டிக் கெடக்கு.....'' என்று கேட்பது போல் ஜனங்கள் தன்னை நிராகரித்துவிட்டு நகர்வ தாய்ப் பட்டது சண்முகநாதனுக்கு.

உட்கார்ந்து சலித்துப் போயிற்று. முகத்து வியர்வையை வழிக்க, நெற்றித் திருநீரும், குங்குமமும் கரைந்து கையில் பிசு பிசுத்தது. பசி வயிற்றைச் கவ்வி இழுத்து நிமிரவிடாமல் செய்தது.

சுவரில் சாய்ந்து கொண்டார். எதிர்ச் சுவரில் கைவிரல்கள் வரையப்பட்டிருந்தன. தீயிலிருந்து கிளம்பும் ஜ்வாலையின் பரவல் போல் ஜாதகவரிக் கோடுகள். குரு, சனி என்று வெவ்வேறு குறிப்புகள். ''ஜாதகம் பார்க்கப்படும் - சண்முக நாதன் பண்டித மணி.'' சிவப்பு எழுத்துக்கள். ஓலைச் சுவடி களின் அடுக்கு.

''உச்சிப் பகலாச்சு. ஒரு பயலும் வரக்காணம். பத்து வருஷம் முந்தின்னா இப்பிடி உக்காந்திட்டிருக்க முடியுமா! கியூவிலே நிப்பானுகளே. வாய் வார்த்தை. வேதமாச்சேன்னு சொல் வாங்களே. இப்போது, ஜாதகம் ஜனங்களுக்கு வேண்டாமுன்னு ஆகிப்போச்சா...''

விசிறிக்காற்று ஆசுவாசப்படுத்தியது. உதடு வறண்டிருந்தது. நாக்கால் தொட்டு ஈரப்படுத்திக் கொண்டார்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் வடிவு வந்து விடுவாள். திக்கென்றது. ''ஒரு மணிக்குப் பொண்ணை அனுப்பறேன். ஏதாச்சும் குடுத்துவுடுங்கோ. இல்லேன்னா இன்னிக்கு ஈரத்துணிதா.''

''என்னமோ அந்தக் கடவுள் வுட்ட வழி. யாராச்சும் ஜாதகம் கொண்டு வர்றாங்களோ, கையைப் பாருன்னு வர்றாங்க ளோன்னு பாக்கறேன். வந்தா வழியுண்டு.''

''ஆமா... பெரிசா வழியிருக்கு. ஊர் பூரா முகூர்த்த நாள், சாந்திக் கல்யாணமுன்னு குறிக்கக் குடுப்பீங்க. சொந்தப் பொண்ணு கன்னி கழியாம இருக்காளேன்னு என்ன அக்கறை உங்களுக்கு....''

வாசலில் வந்து நின்றார். ரோடு பார்வையில் முழுசாய் விழுந்தது. வாகனங்கள் தாறுமாறாய்ப் போய்க் கொண்டிருந் தன. பரீட்சை அட்டைகளுடன் மாணவிகள் சலசலத்துப் போய்க் கொண்டிருந்தனர்.

''கலி காலம்.... சாமியை, நீதியை மறந்த ஜனங்க. பிசாசு புடிச்சு அலையறவங்க மாதிரி காசுக்கும், சொத்துக்கும் பொணமா அலையறாங்க. பெரியவங்கங்கற மரியாதை கெடை யாது. நாள் கெழமைன்னு கெடையாது. எல்லாம் கெட்டுப் போச்சு....''

அப்பாவுடன் ஜாதகம் எழுதின பழைய காலத்தை நினைத் துக் கொண்டார். குழந்தை பிறந்ததும் நேரம் குறிக்கவும், ஜாதகம் எழுதவும் ஆள்தேடுவார்கள். ''ஜாதகம் உங்ககிட்டத்தா எழுத ணும். எங்க தலைமுறையிலே எல்லாத்துக்கும் உங்க குடும்பம் தானே ஜாதகம் எழுதியிருக்கு'' என்பார்கள்.

ஜாதகம் எழுதுவதென்றால் ஒரு நாளில் முடிந்து விடுகிற விஷயமா என்ன? ராஜ உபசாரம்தான். காலையில் இட்லியும், சாம்பாருமாய் மணக்கும். ''என்னங்க ஊர் பூராக் கோழியா மேயுது'' என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டால் போதும், மத்தியானத்தில் அசைவ சமையல்தான். ஜாதகம் எழுதுவது ஓரிரு நாட்களில் முடிந்து விட்டாலும், ''சரி... கொழந்தை பொறந்த வேளையை வெச்சுட்டு அப்பன், ஆத்தா, மாமன் மொறை, தாத்தாவுக்கு என்ன பலன் தருதுன்னு சொல்லிட்டுப் போங்க'' என்று எல்லோரின் ஜாதகக் கட்டுகளையும் முன் வைத்து விட்டால் இன்னும் சில தினங்கள். பிரிவு உபசாரத்தில்

''பத்து வருஷம் முந்தின்னா இப்பிடி உக்காந்திட்டிருக்க முடியுமா! கியூ விலே நிப்பானுகளே. வாய் வார்த்தை வேதமாச்சேன்னு சொல் வாங்களே. இப்போது, ஜாதகம் ஜனங்களுக்கு வேண்டாமுன்னு ஆகிப்போச்சா...''

பணமும், தானியமும் கிடைக்கும்.

சண்முகநாதனின் அப்பா ஜாதகம் தவிர பில்லி சூன்யம் என்று கிரகதோசத்துக்கும் போவார். ''அதையாக்கம் அப்பவே கத்துக் கிட்டுக் கையிலே வெச்கட்டு இருந்திருக்க லாம். சுடுகாடு, பாவை பொம்மை, நடு ராத்திரின்னு பயந்து வேண்டாமுன்னு உதறி யாச்சு. இப்போ அதுக்குக் கூட மரியாதை இல்லையே. எல்லாத்துக்கும் டாக்டர், மருந்து, பணம்.... சாமி பூதம், நல்லது கெட்டதுன்னு இல்லாமப் போச்சு. கோவணத்திலே மூஞ்சியை மறைக்கற பொழப்பு....'' நினைக்க நினைக்க முகம் கறுத்தது அவருக்கு.

கிளி ஜோஸ்யம் செய்து வந்த நாட்களை நினைத்துக் கொண்டார். ''என்ன மதிப்பான காலம். கிளி எடுக்கற அட்டைக்கு அப்படி மவுசு. வாயிலிருந்து வர்ற ஒவ்வொரு வார்த்தையும் தங்கப் பவுனுக்குச் சமானம். கிளிக்குப் பைசா என்ன, நெல்லு மணிக என்ன. நல்ல வாக்குச் சொல்லிட்டா அள்ளிக் குடுக்கற மனசுக......''

லேசாய்ப் புன்னகை வந்தது. அவர் மனைவி அப்படி கிளி ஜோஸ்யம் பார்க்க வந்தவள்தான். ''உங்க கிளி கல்யாண ராசி என்ன சொல்லுது'' என்று நச்சரித்துக் கேட்பாள். அப்புறம் அவரே அந்த ராசிக்கான ஆளாகிப் போறார். ''அவதா இப்போ நீயு மாச்சு, உன் ராசியுமாச் சுன்னு வார்த்தை வீசறா....''

''உங்கிட்ட வந்தா மணிக்கணக்காகும். இப்பதா கம்ப்யூட்டர்லே ஜாதகம் பார்த்துச் சொல்றாங்க. பத்து நிமிஷம் போதும். நீ எரிச்சல்லே என்னென்ன உளறி வெக்கறை யோன்னு பயந்துட்டு இருக்கணும். கம்ப் யூட்டருக்கு எரிச்சல், கோபம் எதுவும் வராது பாரு.... இருக்கறதை இருக்கற மாதிரியே சொல்லும். கெரகம் மோசம், கிரகப் பலன் பண்ணனு கும்பகோணம் போ,



காசி போன்னு தாலியை அறுத்துருவே. அதக் கேட்டுட்டு செலவு பண்ணாமே இருக்க முடியுமா என்ன.. விடுயேன்னு பண்ணித்தா ஆகணும்... இதெல்லாம் அங்க இல்ல பாரு....'' சரசரவெனப் பேசி விட்டது வருத்தமாகத்தான் இருந்தது.

சின்னப்பன் விறுவிறுவென்று போய்க் கொண்டிருந்தான். ''என்ன இப் பெல்லா ஜோசியத்துக்கு வர்றதில்ல'' என்று ஒரு தரம் கேட்டு விட்டார்.

**சுப்ரபாரதிமணியன்**

இந்த கம்ப்யூட்டர் ஜாதகம் வேறு வந்து பிழைப்பில் மண்ணைப் போட்டுவிட்டதே. நாசமாகப் போக என்று மனதுள் சபித்தார்.

சட்டையை எடுத்து மாட்டிக் கொண்டார். கதவைப் பூட்டினார். நசிந்த துருப் பிடித்த பூட்டு போல வாழ்க்கை ஆகி விட்டது என்றிருந்தது. ''இன்னிக்கு அந்தக் கடைக்குள்ள தொழஞ்க என்னதா இருக்குன்னு பாத்துடணும். என்ன மாயம் பண்ணி அஞ்க நிமிஷத்திலே எல்லாம் சொல்றாங்கன்னு பாக்கணும். எத்தனை பேர்த்து வயித்துலே அடிக்கிறானுக. அவனுகளை அடிக்க வழியிருக்கான்னு பாக்கணும். என்ன பெரிய கம்ப்யூட்டர்! என்னோட போட்டிக்கு வர்றியான்னு கேக்கணும். அதெல்லா கண்ணாடி, பீங்கான் சாமானாத்தா இருக்கும். ஒரு குத்து. ஒரு அடியிலே தூளாயிரும். நம்ம எரிச்சலாச்சும் தணியுமே. எவனெவனோ என்னென்னமோ வரக் கூடாதுன்னு ஸ்டிரைக் பண்றான். எதை எதையோ ஒடைக்கிறான். போலீசிலே புடுச்சுக் குடுப்பானா... குடுக்கட்டுமே. ஜெயில்தா இன்னம் பாக்கி. அதையும் பாத்திடலாம்.''

கம்ப்யூட்டர் ஜாதகக் கடையை நெருங்க நெருங்கப் பயமாயிருந்தது சண்முகநாதனுக்கு. ''வீடு வாங்குவீர்களா, கல்யாணம் எப்போது.... மனைவி பணக்காரியா.... கத்தி முனை வாழ்க்கையைக் கம்ப்யூட்டரில் தெரிந்து கொள்ளுங்கள்......'' வாசகங்கள்.

விறுவிறுவென்று உள்ளே நுழைந்தார்.

சாப்பாட்டுப் பொட்டல இலையைப் பிரித்துக் கொண்டிருந்தவன் ''வாங்க'' என்றான். சாதம் மணத்தது. வயிறு பசியை அதிகமாக்கியது. எச்சிலை விழுங்கிக் கொண்டார். கலராய் சாதம் தென்பட்டது.

''உக்காருங்க. சாப்புட்டு வந்தர்றேன். ரொம்பவும் பசிக்குது....'' தனக்கும் பசிக்கிறது என்று வாய்விட்டுச் சொல்ல வேண்டும் போலிருந்தது.

சுற்றிலும் பார்த்தார். ஏதேதோ... டீ.விக்கள் மாதிரி, விலை உயர்ந்தவை என்ற எண்ணம் மனத்தில் வந்தது. விநோதமாய் இருந்தது. மூளையை இப்படி அலங்காரப்படுத்தி வைத்துக் கொண்டார்களே என்றிருந்தது. அலங்காரத்துள் அறிவையும் வைத்துக் கொண்ட சாகசத்தை நினைத்தார்.

இங்கு வரும்போது கையும், மனசும் எப்படியெல்லாம் பரபரத்துக் கொண்டிருந்தன என்பதை நினைத்துப் பார்த்தார். வெட்கமாயிருந்தது. காலம் என்னவெல்லாம் விளைவித்திருக்கிறது. மனித அறிவு எங்கெல்லாம் சென்றிருக்கிறது. காலம் மாறிவருகையில் இதெல்லாம் சகஜம்தான் என்றிருந்தது.

வந்த இன்னொருவன் டீ.வி போல இருந்ததன்முன் உட்கார்ந்தான். விரல்களைச் சொடுக்கிக் கொண்டான். கைவிரல்களைத் தாறுமாறாய் அசைப்பது போலிருந்தது. டீ.வி திரையில் கைகுவித்த பெண் தோன்றினாள். வரிவரியாய் உருவங்கள் தோன்றின. கலைந்தார்கள். புதிதாய்த் தோன்றினார்கள். எழுத்துக்கள் விநோதமாய் தெளிந்து தெரிந்தன. சட்டென எல்லாம் சரிந்தன. வரிவடிவங்கள். கண்களைச் சிமிட்டிக் கொண்டே பார்த்துக் கொண்டிருந்தார்.

காலம் ரொம்பத்தான் மாறிவருகையில் தான் இன்னும் பஞ்சாங்கங்களுக்குள்ளேயே இருப்பதாய்ப் பட்டது. இவை தரும் விநோதம் மீறி ஒருவகை சந்தோஷம் மனத்தில் ஆக்கிரமித்துக் கொண்டது குறித்து ஆச்சர்யம் இருந்தது.

''எதுங்க ஜாதகம் சொல்லுது....''

''மூணாவதா இருக்கு பாரு.....''

அதனருகில் சென்றார். இயந்திரம். விநோதமான இயந்திரம். சிறு குழந்தையை, அதன் முழு அழகையும் பூரணமாய் மனத்துள் உணர்ந்து பரவசத்துடன் பார்ப்பது போலப் பார்த்தார். மெல்லக் கையை நீட்டித் தொட்டார்.

---

## உழைப்பு நின்றால்

## ஆபத்து!



அமெரிக்கக் கோடீசுவரர் ராக்பெல்லர் ரொம்ப வயதான பிறகும் ஓய்வு எடுக்காமல் வர்த்தகம் தொடர்பாக விமானத்தில் போனார். பக்கத்திலிருந்த இளைஞன், ''கோடிக் கணக்கில் வருமானம் வருகிற போது பேசாமல் ரெஸ்ட் எடுக்கலாமே!'' என்று கேட்டான்.

அதற்கு ராக்பெல்லர், ''நாம் பயணம் செய்து கொண்டிருக்கும் விமானத்தை விமானி ஒரு நிலையான உயரத்தில் பறக்க வைத்திருக்கிறார். 'வீணாக எதற்கு என்ஜினை இயக்க வேண்டும்?' என்று என்ஜினை நிறுத்தினால் என்ன ஆகும்?'' எனக் கேட்டார்.

''விபத்து ஏற்படும்!'' என்றான் இளைஞன்.

''வாழ்க்கைப் பயணமும் அப்படித்தான். உழைத்துக் கொண்டே இருக்க வேண்டும். உழைப்பு நின்றால் ஆபத்து! வருமானத்தை மட்டுமே உழைப்புத் தருவதாக நினைக்கக் கூடாது. உடல் ஆரோக்கியத்துக்கும் மனமகிழ்ச்சிக்கும்கூட அது உதவுகிறது'' என்றார் ராக்பெல்லர்.

- கைராஜ்

## டாக்டர் பதில்கள் :

# குறையும் மனம் குடல்புண் தரும்!

● ஏ.ஆர். உமா சங்கர், சென்னை - 40.

டியோடினல் அல்சர் என்றால் என்ன? அதைக் குணப்படுத்த என்ன செய்ய வேண்டும்?

● டாக்டர் பி.ஆர். சுப்பிரமணியம், சென்னை - 18.

●● இரைப்பை முடிந்து, சிறுகுடல் ஆரம்பிக்கும் இடத்தில் உள்ள பாகத்துக்குப் பெயர் டியோடினம். உணவுக் குழாயில் அமிலம் உருவாவதுதான் டியோடினல் அல்சர் அல்லது குடல்புண் வரக் காரணம். எல்லோருக்குமே வயிற்றில் அமிலம் சுரக்கிறது. ஆனால் அல்சர் உண்டாவதில்லை. டியோடினத்தில் உள்ள ஜவ்வுப் பகுதியை எது பலவீனப்படுத்தி, அமிலத்தால் தாக்கப்பட வழிவகுக்கிறது என்பது இன்னும் புரிபடவில்லை. ஆனால் இந்த அமிலத் தாக்குதலுக்கு, புகை பிடித்தல், மது அருந்துதல், மனச் சங்கடங்கள் போன்றவை உத்வேகம் கொடுக்கின்றன என்பது அறியப்பட்டிருக்கிறது. இன்னொரு காரணம், பரம்பரையாக வருவது. இந்தப் புண் ஆறுவதும், மறுபடி வருவதுமாக மாறி மாறி நிகழும். வெகு காலமாக இந்த அல்சர் இருந்தால், ஆறும் காலத்தில் சதைச் சுருக்கம் ஏற்பட்டு அடைப்பு உண்டாகிவிடும். அப்போது அறுவைச் சிகிச்சை அவசியமாகிறது. சில சமயங்களில் அல்சரிலிருந்து ரத்தம் பீறிட்டு வரும். உயிருக்கே ஆபத்தான நிலைகூட உண்டாகிவிடும். முன்பெல்லாம் இதற்கும் அறுவைச் சிகிச்சை அவசியமாயிருந்தது. இப்போது லேசர் சிகிச்சை மூலம் இப்படி ரத்தம் வருவதைத் தடுக்க முடியும். சமீபகாலமாக மருந்தினாலும் அல்சரைக் குணப்படுத்த வழி ஏற்பட்டு இருக்கிறது. இப்போது 90 சதவீதம் அல்சர்களை அறுவைச் சிகிச்சை இன்றியே குணப்படுத்த முடிகிறது.

● ஆர். தாஸ், துறையூர்.

எனது மூன்று வயதுப் பெண் குழந்தைக்கு மயோபதி என்னும் நோய் பீடித்துள்ளது. நரம்பியல் நிபுணர்களிடம் காண்பித்தும் பயனில்லை. இதற்கு வேறு ஏதாவது வைத்திய முறை உள்ளதா?

●● இந்த நோய்க்கான காரணம் இன்னும் அறியப்படவில்லை. இதில் தசையும் நரம்பும் சேருமிடத்தில் நியூரான் எனும் நரம்பின் பகுதி பாதிக்கப்படுகிறது. அதனால் தசைகள் பாதிக்கப்பட்டுப் பலவீனமடைந்து, நன்றாக இயங்கும் சக்தியை இழக்கிறது. இதில் இதயமும் பாதிக்கப்படலாம். கை-கால்கள் சரியாக இயங்காது. இதற்கு மருத்துவத்தில் ஏற்ற மருந்து எதுவும் இல்லை. வைட்டமின் E யும், B12 ம் கொடுக்கலாம் என்கிறார்கள். நிலைமை மோசமாகிவிடாமல் இருக்க, அந்தத் தசைகளுக்கு அசைவு கொடுத்து, தாங்கல் கொடுத்தால், ஓரளவு சௌகரியமான நிலை கிடைக்கும். மொத்தத்தில் பூரண குணம் கிடைக்கும் வாய்ப்பு இல்லை.

தொகுப்பு : எஸ்.வி.என்.





☛ ஷோபா



☛ சுஜாதா



☛ அனுராதா



☛ பிரியா

# நாலு நாள் நாட்டிய உற்சவம்

மற்ற சபாக்கள் நடத்தும் நடன நிகழ்ச்சிகளுக்கும், 'கலாமந்திர் டிரஸ்ட்' நடத்தும் நடன நிகழ்ச்சிக்கும் வித்தியாசமுண்டு. ஒரு ஐட்டம் நடந்து கொண்டிருக்கும் போது உள்ளே நுழையவோ, வெளியே போகவோ கூடாது. பார்வையாளர்க்கு இடைஞ்சலாக வீடியோ படமோ, புகைப் படமோ எடுக்கக் கூடாது...

ஒருமுறை க்ரீஸ் நாட்டுச் சுற்றுலாப் பயணிகள் இருவர், தரக்குறைவான உடையோடு சபைக்குள் நுழைய முயன்ற போது, தடுத்து நிறுத்தப்பட்டார்கள். தம்பதி, தங்கள் ஓட்டல் அறைக்குப் போய் வேறு உடை மாற்றிக் கொண்டு திரும்பிய பின்னரே உள்ளே அனுமதிக்கப்பட்டார்கள். ஆனால் அவர்கள் கோபப்படவில்லை. நிகழ்ச்சி முடிந்து அமைப்பாளர்களைத் தேடிப் பிடித்து நன்றியும் பாராட்டும் சொல்லி விட்டுப் போனார்கள்!

கலைக்கு மரியாதை கொடுக்க வேண்டும் என்று கலாமந்திர் கருதுவதற்கு இதெல்லாம் சான்று.

இந்த வருடம் கலாமந்திர் டிரஸ்ட் நடத்திய நிகழ்ச்சிக்கு 'தேவதா வந்தனம்' என்று பெயரிட்டிருந்தார்கள். ஒவ்வொரு நடனக் கலைஞரும், ஒவ்வொரு தெய்வத்தின் புகழ் பாடும் நிகழ்ச்சியாக அமைத்தார்கள். கலைஞர்கள், வேங்கடாசலபதி; ஊர்மிளா சத்தியநாராயணா; ஸ்ரீலதா விசுவநாதன்; ரேவதி ராமச்சந்திரன்; அனுராதா ஜகந்நாதன்; ஷோபா நடராஜன்; ஸ்ரீநிதி ரங்கராஜன்; பிரியா மகாதேவன்; சுஜாதா சீனிவாசன் ஆகிய ஒவ்வொருவருக்கும் ஒரு தலைப்புக் கொடுத்து, யார் யார் எந்த தெய்வத்தைப் பற்றிய நாட்டிய நிகழ்ச்சி செய்ய வேண்டும் என்று தீர்மானித்தார்கள். இந்த விவாதங்களில் நேரிடையாகப் பங்கு கொண்டு, ஒவ்வொரு கட்டத்திலும் பேசி, நிகழ்ச்சிகளை ஒரு வடிவத்துக்குக் கொண்டு வந்ததில் 'என்ஃபீல்ட்' விசுவநாதனுக்கும், திருமதி கோமதி விசுவநாதனுக்கும் நிறையவே பங்கு உண்டு.

மற்ற நாட்டிய நிகழ்ச்சிகளில் மேடை அலங்காரத்துக்கோ, ஒளி அமைப்புக்கோ அதிக முக்கியத்துவம் அளிக்க மாட்டார்கள். நடனக் கலைஞர்கள் அணியப் போகும் உடையின் வர்ணம் என்ன, அவர்கள் வழங்கும் நிகழ்ச்சி, எந்த தெய்வத்தைப் பற்றியது என்றெல்லாம் விவாதங்களில் பங்கு கொண்டு அறிந்து, வெகு எளிதான முறையில் மேடையை அழகுபடுத்தியிருந்தார் ஓவியர் ரமணி.

ஒலியமைப்பில் கூடக் கவனம் செலுத்தியிருந்தார்கள். ஆனாலும் கற்பனைத் திறன் மிக்க மிருதங்கக் கலைஞர் பாலசந்தர் வாசித்த போது, வால்யூம் படு பயங்கரமாகத்தான் இருந்தது. பிளக்கப் போவது நம் காதா அவர் மிருதங்கமா என்று கூட ஒரு கட்டத்தில் தோன்றியது!

- சாருகேசி

☛ வேங்கடாசலபதி



☛ ஊர்மிளா



☛ ஸ்ரீநிதி



☛ ரேவதி



☛ ஸ்ரீலதா





சசிகபூர்



கிஷோர் குமார்

# திடுக்கிட வைத்த புதுமுகம்!

"உங்களுக்குப் பணியாற்றுவதே பெருமை. என்ன ரேட் தந்தாலும் சரி" என்று அன்று என்னிடம் சொன்ன இசையமைப்பாளர்கள், லக்ஷ்மிகாந்த் - பியாரிலால்! என் படங்களைப் பார்த்ததாலும் அவற்றின் வெற்றி காரணமாகவும் என் மீது ஒரு மரியாதை ஏற்பட்டு, நான் அழைத்ததுமே என்னை ஓட்டல் அறையில் வந்து சந்தித்து இவ்வாறு கூறினார்கள்.

'காதலிக்க நேரமில்லை' ஹிந்தி படத் தயாரிப்புக்கு இசையமைப்பாளர் தீர்மான மானதும் யார் யாரை நடிக்க அழைப்பது என்ற யோசனையில் ஆழ்ந்தேன். எடுத்த உடனே என் நினைவுக்கு வந்தவர் சசிகபூர் தான். எப்போதுமே அவர் மீது எனக்கு ஒரு தனி 'அட்மைரேஷன்'. காரணம் அவரது இளமைத் துடிப்பு. தமிழில் ரவிச்சந்திரன் நடித்த ரோலில் சசியைப் போடத் தீர்மானித்தேன்.

அடுத்து முத்துராமன் கேரக்டர். அது காமெடி கலந்த கதாபாத்திரம். பொருத்தமான ஹிந்தி நடிகர் யார்? அத்தனை ஹிந்தி நடிகர்களையும் பட்டியல் போட்டேன். லோ பட்ஜெட் படம் என்பதால் பெரிய ஸ்டார்களை லிஸ்ட்டிலிருந்து நீக்கினேன். மிச்சமிருந்த பெயர்களைத் திரும்பத் திரும்ப அலசிப் பார்த்தேன். ஊஹூம், ஒருவரும் எனக்குத் திருப்தி தரவில்லை.

கொஞ்சம் மன பாரத்துடன்தான் லக்ஷ்மிகாந்த் பியாரிலாலைச் சந்திக்க ஒரு ரெகார்டிங் தியேட்டருக்குப் போனேன். அவர்கள் ஒரு படத்தின் 'ரஷ்' பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் வந்திருப்பதாகத் தெரிந்ததும் என்னைக் காக்க வைக்க விரும்பாமல் 'ரஷ்' பார்த்துக் கொண்டிருந்த தியேட்டருக்கே வரச் சொல்லி விட்டார்கள். நானும் அவர்களைத் தர்மசங்கடத்தில் ஆழ்த்த விரும்பாததால் தியேட்டரில் போய் அவர்கள் அருகில் அமர்ந்தேன். 'ரஷ்' ஓடிக் கொண்டிருந்தது.

அதில் பிரபல பாடகராக மட்டுமின்றி, படங்களில் நடிக்கவும் செய்த கிஷோர் குமார் தோன்றினார். காமெடியான காரெக்டர்தான். ரொம்ப காஷுவலாக நடித்துக் கொண்டிருந்தார். அந்தக் கணத்திலேயே, 'முத்துராமன் கேரக்டரில் இவரை நடிக்கச் செய்தால் என்ன!' என்று எனக்குத் தோன்றியது.

'ரஷ்' முடிந்ததும் லக்ஷ்மிகாந்த் பியாரிலால் என்னைக் காக்க வைக்க நேர்ந்ததற்காக வருத்தம் தெரிவித்தார்கள். நானோ எனக்கு எவ்வளவு பெரிய உபகாரம் அவர்கள் செய்திருக்கிறார்கள் என்பதை விளக்கி நன்றி தெரிவித்து விட்டு, வந்த காரியத்தையும் முடித்துக் கொண்டு திரும்பினேன்!

'கிஷோர் குமார்' என்று நான் வாய் திறந்து கூறக் கேட்டதுமே என் பம்பாய் நண்பர்கள் சிலர், "ஐயோ, அவரா!" என்று பூச்சாண்டி காட்டினார்கள். "கிஷோர் ஒரு எக்ஸெண்ட்ரிக்! எதுக்கு வீண் வம்பை விலைக்கு வாங்கறீங்க?" என்று எச்சரித்தார்கள். "பாடல் ரெகார்டிங்குக்கே அவர் தண்ணீர் காட்டுவார்; உங்களுக்குக் கால் ஷீட் தந்து, அதை மதிச்சு நடந்து, நடிக்கக் கிழிச்சாப்பலதான்" என்றார்கள்.

ஆனால் என் சுபாவம்தான் உங்களுக்குத் தெரியுமே. ஒரு விஷயம் அழுத்தமாக மனசில் பட்டு விட்டால் அப்புறம் இலேசில் மாற்றிக் கொள்ள மாட்டேனே. அதனால் நானே ஃபோனில் கிஷோருடன் தொடர்பு கொண்டு பேசினேன். சந்தித்தோம். என் விருப்பத்தை அறிந்து அவர் சம்மதித்தார். பிறகுதான் மெல்ல என் கண்டிஷன்களை ஒவ்வொன்றாய் விண்டு வைத்தேன்.

டைரக்டர் ஸ்ரீதர்

''படத்தை பம்பாயில் நான் எடுக்கப் போவதில்லை. தமிழ்நாட்டில் எழிலார்ந்த ஆளியாறு அணைக்கட்டுப் பகுதியில்தான் எடுக்க உத்தேசம். ஏறத்தாழ முழுப் படமும் 'அவுட்டோர்' என்பதால், அத்தனை ஆர்ட்டிஸ்ட்டுகளிடமும் ஒரே சமயத்தில் எனக்கு நாற்பது நாள் கால்ஷீட் தேவை.''

''ஓ.கே.'' என்றார் கிஷோர்.

''எனக்கு முழுமையான ஒத்துழைப்புத் தருவீர்கள் என்று நம்புகிறேன்.''

கிஷோர் என் கையைப் பற்றிக் கொண்டார். ''ஸ்ரீதர்! நான் கொடுத்த வாக்கை மீற மாட்டேன், சத்தியம்'' என்றார்.

அடுத்து நாகேஷ் கேரக்டருக்கு ஏற்கெனவே நெஞ்சில் ஓர் ஆலயம் ஹிந்தி படத்தில் நடித்திருந்த மெஹ்மூதைக் கஷ்டம் ஏதுமின்றி 'புக்' செய்தேன்.

நடிகைகள் விஷயத்தில் ஒரு சிக்கல் ஏற்பட்டது. அன்று ஹிந்தி பட உலகில் பிரபலமாய் இருந்தவர்கள் ஷர்மிளா டாகூர், ஆஷா பரேக், ஜெயஸ்ரீ ஆகியோர். மூவரையும் அணுகினேன்; மூவரும் மறுத்து விட்டனர்! அதற்கு அவர்கள் சொன்ன காரணம் என்ன தெரியுமா?

''ஸிங்கிள் ஹீரோவின்னா சொல்லுங்களார்; டபுள் ஹீரோவின் கதைன்னா என்னால் நடிக்க முடியாது!''

மூன்று பேரும் இதையே கூறினார்கள்! இந்த 'காம்ப்ளெக்ஸ்' எனக்கு வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது. ஹீரோக்களுக்கு இல்லாத இந்த 'காம்ப்ளெக்ஸ்' இவர்களுக்கு மட்டும் ஏன்? இன்றுவரை எனக்கு விடை கிடைக்கவில்லை!

கடைசியில் என் நண்பர் - இந்தி நடிகர்- ராஜேந்திர குமாரை அணுகி, பிரச்னையைச் சொல்லி, ''யாராவது புதுமுகமாய் இருந்தால் 'புக்' பண்ணிக் கொடுங்கள்'' என்றேன்.

அவர் உடனே உற்சாகமாக, ''டைரக்டர் கிஷோர் சாபு தமது படத்தில் ஓர் இளம் பெண்ணை அறிமுகப்படுத்துகிறார். 'பளிச்' சென்று அவள் பார்க்க லட்சணமாய் இருக்கிறாள். அவளைப் போடுங்க'' என்று சிபாரிசு செய்ததுடன் நில்லாமல், என்னை அழைத்துக் கொண்டு கிஷோர் சாபுவிடமே போய் விட்டார். கிஷோர் சாபுவும் அந்தப் பெண்ணுடன் பேசி, முப்பதாயிரம் ரூபாய்க்கு அவளை ஒப்பந்தம் செய்து தந்தார். இவ்வாறு தமிழில் ராஜஸ்ரீ நடித்த ரோலுக்கு ஹிந்தியில் ஒப்பந்தமானவர் கும்கும் கக்காவி.

அடுத்து காஞ்சனாவின் ரோலுக்கும் ஒரு புது நடிகையையே போடலாம் என்று தீர்மானித்து, ராஜேந்திரகுமாரையே மீண்டும் யோசனை கேட்க, ஷம்மி கப்பூருடன் ஒரே ஒரு படத்தில் மட்டும் நடித்திருந்த கல்பனாவை அவர் சிபாரிசு செய்ய, அவரையே 'புக்' செய்தேன். மெஹ்மூதுக்கு ஜோடியாக மும்தாஜ் ஒப்பந்தமானார்.

ஒருவழியாக ஒப்பந்தங்களெல்லாம் செய்து முடித்ததும் முதல் கட்டமாக, சென்னை வாஹினி ஸ்டுடியோவில் படத்தின் குறைந்தபட்ச இன்டோர் படப்பிடிப்பு ஆரம்பமாயிற்று. கூடவே எனக்கு முதல் சோதனையும் தொடங்கியது!

தமிழில் 'அனுபவம் புதுமை' என்று ஒரு பாடல் வருமே, 'காதலிக்க நேரமில்லை' படத்தில், நினைவிருக்கிறதா? அதற்கு இணையாக 'பியார் கியே ஜா' என்ற ஹிந்தி படத்தில் ஒரு பாடல் காட்சி. இந்தக் குளியலறை பாடல் காட்சியில் நடிக்க வேண்டியவர் கும்முத் சுக்கானி. ஷூட்டிங்குக்கு எல்லாம் ரெடி என்றதும், மேக் அப் போட்டுக் கொண்டு குளியல் உடையுடன் வந்து நின்றார் அவர்.

நான் திடுக்கிட்டுப் போனேன்! கூச்சம் தான் காரணமோ, அல்லது இயற்கையாகவே அவர் உடலமைப்பு அப்படித் தானோ, கூனிக்குறுகியது போல் அவர் வந்து நின்றவிதமே எனக்குப் பிடிக்கவில்லை!

அரை மனதுடன் காட்சியை விளக்கிக் கூறும்போதே, 'இந்தப் பெண்ணுக்கு ஒரு கவர்ச்சியான அப்பீலே இல்லையே' என்ற எண்ணமே மேலோங்கியது. 'இவளைத் தேர்ந்தெடுத்ததன் மூலம் நீ பெரும் தவறு செய்து விட்டாய்' என்று என் உள்ளுணர்வு இடித்துக் காட்டிக் கொண்டேயிருந்தது. தமிழில் இதே காட்சியில் நடித்த ராஜஸ்ரீயின் உருவம் என் மனத் திரையில் தோன்றிக் கொண்டே இருந்தது.

சட்டென்று திரும்பி, ''என் மூட் அவுட்; ஷூட்டிங் கான்ஸல்ட்'' என்று யூனிட்காரர்களிடம் கூறி விட்டுத் தனிமையில் போய் அமர்ந்து யோசித்தேன்.

அப்படி யோசித்த போது, இதை விடப் பெரிதாக இயற்கை ஏற்படுத்தப் போகும் ஒரு சோதனையையும் மற்றும் ஒரு நடிகை உருவாக்கப் போகும் சிக்கலையும் 'பியார் கியே ஜா' படப்பிடிப்பு முடிவதற்குள் நான் சந்திக்க வேண்டியிருக்கும் என்பதையா எண்ணிப் பார்த்தேன்!

அவை என்ன? எல்லாவற்றையும் எப்படிச் சமாளித்தேன்? ஒரு வாரம் சஸ்பென்ஸைச் சமாளியுங்கள்!

# சின்னச் சின்னச் செய்திகள்



## விண்வெளியில் ஓர் அதிர்ச்சி!

ரஷ்ய விண் வெளி வீரர் கிரிக்கலேவ் கடந்த ஆண்டு மே மாதம் விண்வெளிக்குப் போனார். 313 நாட்கள் கழித்துத் திட்ட மிட்டபடி திரும்பி வர எண்ணியவருக்கு அதிர்ச்சி! சோவியத் யூனியன் சிதறுண்டு போயிற்று. எந்த தேசம் அவரைத் திரும்ப அழைத்து வரச் செலவழிப்பது என்பது பிரச்னை ஒன்று! எந்த அரசிடமும் பணம் இல்லை என்பது பிரச்னை இரண்டு! கடைசியில் ஜெர்மனி முன் வந்து அவர் பூமிக்குத் திரும்பப் பணம் திரட்டி அளித்து உதவியது.

## கொழுப்பு நீங்கிய முட்டைகள் :

முட்டையில் கொலஸ்ட்ரால் அதிகம் என்பதால் பலருக்கும் பயம். இதைச் சமாளிக்க ஒரு புதுமுறை கண்டு பிடிக்கப் பட்டுள்ளது, அமெரிக்காவில். ஒரு மிஷின் முட்டையை உடைக்கிறது. மஞ்சளையும் வெள்ளைப் பகுதியையும் பிரித்து விடுகிறது. மஞ்ச ளில் ஒரு ரசாயனப் பொருள் சேர்த்துக் கடையும் போது, அது கொலஸ்ட்ராலை ஈர்க்கிறது. பிறகு ரசாயனச் சத்தைப் பிரித்தெடுத்து விட, கொலஸ்ட்ராலில் இருபது சதமே பாக்கி நிற்கிறது. எண்பது சதம் நீக்கப்பட்டு விடுகிறது. இப்போது முட்டையின் வெள்ளைப் பகுதி மீண்டும் சேர்க்கப்பட்டு, கிருமிகள் நாசமடைய உயர் உஷ்ணத்தில் காட்டி, பின்னர் குளிர்விக்கப்பட்டு, பாக்கிங் ஆகிறது. இந்த மாவில் அரை 'கப்' என்பது, இரு முட்டைகளுக்குச் சமம். 'ஹார்ட் அட்டாக்' பயமின்றி விழுங்கலாம்!

– திஜூஸ் வீக்




## வேலிக்குச் செலவாகும் கோடிகள்!

இந்தியா - பாகிஸ்தான் எல்லையில் வேலி போடும் பணி மும்முரமாக நடந்து வருகிறது. பஞ்சாபில் 356.20 கி.மீ. தூரத்திற்கும், ராஜஸ்தானில் 171.50 கி.மீ. தூரத்திற்கும் வேலி போடும் பணி முடிந்துள்ளது. இன்னும், முறையே 77.30 கி.மீ. 84.85 கி.மீ. நீளத்திற்கு இம்மாநிலங்களில் வேலி போட வேண்டும். சென்ற ஆண்டு டிசம்பர் வரை ரூ. 99.43 கோடி இதற்கெனச் செலவிடப் பட்டது. 1992-93 ஆண்டுக்கு ரூ. 37.82 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது.

## குண்டு புரளி!

தொலைபேசி மூலம் வெடிகுண்டுப் புரளியைக் கிளப்பி விடுபவர்களுக்கு ஒரு எச்சரிக்கை. புது தில்லியில் வெடிகுண்டு சம்பந்தப்பட்ட 184 தகவல்கள் கொடுத்தவர்களில் 50 பேரைக் காவல் துறை பிடித்துள்ளது. அவர்களின் தொலைபேசி இணைப்புகளை நிரந்தரமாகத் துண்டிக்கவும் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. புரளியான தகவல்கள் மூலம் ஒருவரை மிரட்டுவது, ஒரு நிகழ்ச்சியைத் தடை செய்வது முதலிய செயல்கள் நடைபெற்று வருகின்றன. எந்த இடத்திலிருந்து தொலைபேசித் தகவல் வருகிறது என்று கண்டு பிடிக்கும் புதிய முறையைக் காவல்துறை இன்று அறிந்து வைத்திருக்கிறது. – தூவானம்

ஓர் அறுவை :

''டெண்டுல்கர் தம்பி பேரு என்ன?''

''நைன்டுல்கர்!''

# சபாஷ், சரியான தலையங்கம்!

## நடுநிலை விமர்சனம்

◆ ''முதல்வர் மனு வாங்குவதை எல்லோரும் 'ஆஹா' 'ஓஹோ' எனப் புகழ்ந்து தள்ளிக் கொண்டிருக்க, நீங்கள் மட்டும் நடுநிலைமையுடன் அதனை எடுத்துக் கொண்டு விமர்சித்திருப்பது பாராட்டுக்குரியது.

மதுரை - 16, வி. பரமசிவம்.

## சபாஷ்!

◆ சபாஷ்! சரியான தலையங்கம், ''போலீஸ் அரக்கர்கள்.''

திருவாரூர், சா. தென்றல் இளங்கோ.




## மரியாதைத் தடுமாற்றம்

◆ ''சென்னை போலீஸ் கமிஷனர் ஆர். ராஜகோபாலன் பேட்டியைப் படித்ததும் போலீஸ் துறை மீது ஒரு மரியாதையை ஏற்படச் செய்த அதே நேரம், அடுத்து வந்த தலையங்க வரிகளைப் படித்ததும், அந்த மரியாதை ஏனோ கொஞ்சம் தடுமாறி விட்டது!''

சத்திரம் கருப்பூர், மு. அர்ஜுப்கான்.

## மௌனம் கூட...

◆ மௌனம் கூட ஒருவகையில் காதல் மகத்துவத்தைத் தெளிவாக்கும் என்ற உயர்ந்த கருத்தை உணரவைத்தது உத்தமசோழனின் சிறுகதை.

கொங்கணாபுரம், வே. செந்தில்குமார்.

## பொறுப்பான பதில்!

◆ ''நீங்கள் தொடர்ந்து இந்திய அணியில் இடம்பெற முடியாமல் போனதற்கு என்ன காரணம்?'' என்ற கேள்விக்கு, ''என்னை விடத் திறமைசாலிகள் செலக்ஷன் கமிட்டியின் கண்களுக்குப் புலப்பட்டிருக்கலாம்....'' என்ற ராமனின் பதில், அவரை ஒரு பொறுப்புள்ள, விளையாட்டு வீரராக எங்களுக்கு இனம்காட்டியது!

மொரட்டுப்பாளையம், கே. கஸ்தூரி.

## நாமா, தோற்றோமா?

◆ 'ரன்மெஷின்' ராமனின் பேட்டி அருமை! அவரது பேட்டியில் ஸ்ரீலங்காவிடம் தோற்காமலிருந்திருந்தால் இந்தியாவிற்கு இன்னும் இரண்டு பாயிண்டுகள் கிடைத்திருக்கும் எனக் கூறியுள்ளார். மேற்படி போட்டி 'இரண்டே' பந்துகள் வீசப்பட்ட நிலையில் மழையின் காரணமாகக் கைவிடப்பட்டு இரு அணிகளுக்கும் தலா ஒரு பாயிண்ட் வழங்கப்பட்டது என்பதுதான் உண்மையாகும்.

திண்டுக்கல் - 1, எப்போதும் வென்றான்.

## கார்ட்டூன் அருமை!

◆ உலகக் கோப்பையை வென்றதன் மூலம் பெற்ற பரிசுத் தொகையைப் புற்றுநோயைக் குணமாக்கப் போராடுபவர்களுக்கு இம்ரான் கான் கொடுப்பதாக வெளியான உங்கள் கார்ட்டூன் அருமை.

ஆதம்பாக்கம், கபில. வெங்கடேசன்.

## பாராட்டு!

◆ ஆண்களின் மனத்தை அழகாக, 'பளிச்'சென்று சொல்லி விட்டார் 'யோசித்துச் சொன்னால் போதும்' சிறுகதை மூலம். மதுமிதாவுக்குப் பாராட்டுக்கள்...!

மேட்டூர் அணை - 2, ஆர். கருணாகரன்.

## பயனுள்ள தகவல்

◆ வீடு கட்டுபவர்களுக்கும் வீடு கட்டியவர்களுக்கும் பயனுள்ள தகவல் - ''வீட்டைக் கட்டிப் பார்; கறையானை ஒழித்துப் பார்!''

காரிமங்கலம், கொ. இரமேஷ்.

## எழுச்சிமிக்க கவிதை!

◆ மனோதைரியம் குன்றி, விரக்தியின் விளிம்பிற்குச் சென்று கொண்டிருக்கும் இளம் சமுதாயத்தினரை, வீறுகொண்டு எழச் செய்யும் எழுச்சிமிக்க, கவின்மிகு கவிதை. மலர்மதியின் கவிதை!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

## அது அப்படியல்ல!

◆ கல்கி 29.3.92 இதழ் தராசு பகுதியில், மயிலை கபாலீசுவரர் ஆலயத்தில் நடைபெற விருந்த பட்டிமண்டபத்தின் தலைப்பு குறித்து எழுதியிருந்தீர்கள். 'பெரிய புராணத்தில் மிகுந்து நிற்பது அடியார் பெருமையா? ஆண்டவன் பெருமையா?' என்ற தலைப்பில் நீங்கள் எண்ணியது போல் ஆண்டவனையோ அடியவரையோ யாரும் குறைத்துப் பேசவில்லை! அடியவர்களுக்காக ஆண்டவன் எந்த அளவு இறங்கி வந்தான் என்பதை எதிர்த்தரப்பினர் கூற, ஆண்டவன் அருள் பெற்ற நாவுக்கரசரையே தெய்வமாக எண்ணி வழிபட்ட அப்பூதியடிகள் பெருமையை நாங்கள் பாராட்ட, ''தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே'' என்று தீர்ப்பு வழங்கினார் அவ்வை நடராசன்.

சென்னை, சாரதா நம்பி ஆரூரன்.

● ராஜாராம் மோகன் ராய் இறந்தது இங்கிலாந்தில். அவருடைய சமாதி அங்கே இருக்கிறது.

● சமஸ்கிருத மொழி வல்லுனரான ஜெர்மானிய நாட்டு மாக்ஸ் முல்லர், இந்தியாவுக்கு ஒரு முறை கூட வந்தது இல்லை.

● பிரபலமான மலையாளக் கவிஞர் குமாரன் ஆசான் தாழ்த்தப்பட்ட ஈழவ சமுதாயத்தைச் சேர்ந்தவரானாலும் கூட சமஸ்கிருதத்தில் மிகவும் புலமை பெற்றிருந்தார். தம் பதினாறாம் வயதிலேயே சமஸ்கிருதத்தில் கவிதைகள் எழுத ஆரம்பித்தார். அவர், மலையாளக் கவிதைகள் எழுதத் தொடங்கியது முப்பத்தாறாவது வயதில் தான்.

● ஜி.டி. பிர்லா, பிரெஞ்சு மொழியைக் கற்றுக் கொண்டது தமது அறுபதாவது வயதில்.

# நேருஜியைத் தாக்கிய சாணக்கியா!

● கல்கத்தாவிலிருந்து வெளிவந்த மாடர்ன் ரெவ்யூ என்ற பத்திரிகையில், 'நேருஜி போன்றவர்களால் ஜனநாயகத்துக்கு ஆபத்து' என்று நேருவை விளாசி ஒரு கட்டுரை எழுதியிருந்தார் 'சாணக்கியா' என்பவர். இப்படி ஒரு விமர்சனக் கட்டுரை எழுதிய சாணக்கியா வேறு யாருமில்லை நேருஜியே தான்!

● பாபநாசம் சிவனின் இயற் பெயர் ராமையா. வக்கீல் கிருஷ்ணசாமி என்பவர் பாபநாசத்தில் ராமையாவின் திறமையை வெளிப்படுத்தியதாலும் தமது சிவபக்தி காரணமாகவும் ராமையா, பாபநாசம் சிவன் ஆனார்.

● ரஷ்ய சர்வாதிகாரியான ஸ்டாலினைச் சந்தித்துப் பேசிய முதல் வெளிநாட்டுத் தூதுவர் ஓர் இந்தியர். அவர், டாக்டர் ராதாகிருஷ்ணன்.

● ஆற்காடு இரட்டையர்களான ராமசாமி முதலியார், லட்சுமணசாமி முதலியார் இருவரும், இரட்டையர்களாய்ப் பிறந்த சகோதரிகளையே மணந்து கொண்டார்கள்.

● அரவிந்தர், ஐ.சி.எஸ். பரீட்சையில், குதிரைச் சவாரியில் தேறாததால், வெற்றி பெற முடியவில்லை. பின்னர் சுதந்திரப் போராட்டத்துக்கு வந்தார்.

● சர்க்கஸ் வித்தைக்காரர் ஒருவரின் எட்டுக் குழந்தைகளில் மூத்தவராய்ப் பிறந்தவர் கணித மேதை சகுந்தலா தேவி. அவர் பள்ளிக்கூடமே போனதில்லை.

● குழந்தைப் பாடல்கள் பல எழுதிய கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, பள்ளியில் விஞ்ஞான ஆசிரியராய்த்தான் தம் பணியைத் தொடங்கினார்.

● நீதிபதி பம்மல் சம்பந்த முதலியார் ஒரு குறிப்பிட்ட தினத்தில் கோர்ட்டுக்கு வர மாட்டார் என அனைவரும் நினைத்திருந்தனர். ஆனால் சரியாகப் பத்தோரு மணிக்கு நீதிமன்றத்தில் ஆஜராகி விட்டார். அன்று அவர் இறந்த தம் மனைவிக்குச் சடங்குகளை முடித்தபின் கோர்ட்டுக்கு வந்தார்.

தொகுப்பு :
**கௌதம் ராம்**

நன்றி :
''பிரமுகர்களின் மறுபக்கம்''
வெளியீடு :
அநுராகம்,
சென்னை.











**உங்கள் செல்வம் :**

# இன்றைய முதலீடு நாளைய லாபம்!

அரசின் புதிய தொழில் வர்த்தகக் கொள்கைகளின் விளைவாக 'ஓகோகோ' என்று உயர்ந்த பங்கு மார்க்கெட் விலைகள், பின்னர் சரியத் தொடங்கி, இன்று ஒருவாறு ஸ்திரப்பட்டு வருகின்றன. இந்த நிலையில் புதிய நிறுவனங்கள் பல உற்சாகமாக மக்களிடம் முதலீடு கோரி வருகின்றன. பல காலமாக நடந்து வரும் நிறுவனங்களும் விஸ்தரிப்புத் திட்டங்களுக்காக முதலீடு கோருகின்றன. பின்வரும் நிறுவனங்களில் முதலீடு செய்வது எதிர்காலத்தில் பங்குகளின் விலை உயர, லாபகரமாக அமையலாம். அத்துடன் நாட்டின் தொழில்வளப் பெருக்கத்துக்கு உதவிய திருப்தியும் உங்களுக்குக் கிடைக்கும்.

## PRIME PETRO PRODUCTS :

இந்நிறுவனம் பி. வி. ஸி. குழாய்களையும், குழாய் இணைப்புக்களையும், தண்ணீர்த் தொட்டிகள் போன்றவற்றையும் தயாரித்து வருகிறது. இவற்றுக்கு இன்று நாடு முழுவதும் நல்ல கிராக்கி. தொழிலகம், உத்தரப் பிரதேசத்தில் இருக்கிறது. ஸரத் குமார் அகர்வால் இதன் தலைவர். விஸ்தரிப்புத் திட்டத்துக்கு ரூ. 950 லட்சம் தேவை. இதில் ஏற்கெனவே உள்ள பங்குதாரர்களுக்கு என்று ஒதுக் கியது போக, மீதி 312 லட்சம் ரூபாய்க்குரிய பத்து ரூபாய்ப் பங்குகள், பொது மக்களுக்கு வழங்கப்பட உள்ளன. ஏப்ரல் 20 முதல் 23 வரை விண்ணப்பிக்கலாம்.



## INDIAN TONERS&DEVELOPERS :

'ஜெராக்ஸ்' என்று வழக்கமாகப் பேசப்படும் ஃபோட்டோ காப்பி எடுப் பதில் தேவைப்படும் ரசாயனப் பொருள்கள் (டெவலப்பர் - டோனர்) தயாரிப்பில் இறங்கியுள்ள நிறுவனம் இது. இன்று திரும்பின பக்கமெல்லாம் ஃபோட்டோ காப்பி நிறுவனங்கள் உள்ளதால் இந்த ரசாயனப் பொருள்களுக்கும் தேவை அதிகம். சர்வதேசத் தரத்துக்கு இந்த நிறுவனம் தயாரிக்கிறது. ஒவ்வொன்றும் பத்து ரூபாய் பெறுமானமுள்ள பங்குகளை மொத்தம் ரூ 2.80 கோடிக்குப் பொது மக்களுக்கு வழங்கவிருக்கிறது. விண்ணப்பிக்கத் தொடக்க தேதி ஏப்ரல், 20.

## GLOBAL TELE SYSTEMS :

தொலை தூரத் தொடர்புத் துறையில் நவீனக் கருவிகளைத் தயாரிக்கும் நிறுவனம் இது. ஃபேக்ஸ், (Fax) பட்டன் டெலிஃபோன், ஒயர்கள் தேவைப்படாத 'நடமாடும்' டெலிஃபோன் முதலியன. இன்று வெகு வேகமாக முன்னேறி வரும் துறை. ஒரு கோடியே எழுபத்தோரு லட்சம் மூலதனம் திரட்ட மக்களுக்குப் பங்குகளை விநியோகிக் கிறது. ஏப்ரல் 20 முதல் விண்ணப்பிக்..லாம்.

## PAN ASIA INDUSTRIES :

சிமெண்ட் தயாரித்து வரும் இந்த நிறுவனம் ஆண்டு தோறும் 75,000 டன் சிமெண்ட் அதிகப்படியாக உற்பத்தி செய்ய விஸ்தரிப்புத் திட்டம் வைத்துள்ளது. இதற்காக மூலதனம் திரட்ட, தலா ரூ 10 பெறுமானமுள்ள 50 லட்சம் பங்குகளை விநியோகிக்கிறது. ஏப்ரல் 21 முதல் விண்ணப்பிக்கலாம். சிமெண்ட் எவ்வளவு அத்தியாவசியப் பொருள் என்பதும், நாளுக்கு நாள் அதன் தேவை அதிகரித்து வருவதும் அனைவரும் அறிந்ததே.

– வி. கோபாலன்

**வேலாயுதன் :**

# லட்சம் பெறும் விவசாயி



மீன் பண்ணையில்...

கேரளத்தின் சிறந்த ஒரு விவசாயியை ஆண்டுதோறும் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்குவதென மலையாள மனோரமா பத்திரிகை தீர்மானித்தது. ஒரு லட்சம் ரூபாய் பரிசு! இவ்வாண்டு இதனைப் பெறுபவர் வேலாயுதன்.



வேலாயுதன்

இவர் பாறை நிலத்தைப் பண்படுத்திப் பலரக விவசாயம் செய்கிறார். இதற்காக நவீன விஞ்ஞானத்தையும் பாரம்பரிய விவசாயக் கலையையும் இணைத்துச் செயல்படுகிறார். தமது பண்ணையில் ஓர் அங்குலம் வீணாக்காமல் தென்னை, ரப்பர், மிளகு, வாழை என்று பலவகைப் பயிர்களை விளைவிக்கிறார். தென்னையில் ஒட்டு விதைகளைப் பெற கேரள அரசின் விவசாயத் துறை இவரையே நாடுகிறது!

மீன் பண்ணையிலும் வேலாயுதன் வெற்றி பெற்றுள்ளார். செங்கல் சூளைகளால் பாழாகிக் கைவிடப்பட்ட நிலத்தில் மீன் பண்ணை உருவாக்கினார். செயற்கை முறையில் இனப்பெருக்கம் செய்து ஓராண்டில் 35 லட்சம் மீன் குஞ்சுகள் காண்கிறார்.

கோழிப் பண்ணை, மீன் பண்ணை, பன்றிப் பண்ணை - இவை நடத்தி, இவற்றிலிருந்து கிடைக்கும் கழிவுகளை உரமாக்கி, விவசாயத்தில் நல்ல பலன் அடைகிறார்.

வேலாயுதன் ஒன்றுமில்லா நிலையிலிருந்து 'ஓகோ'வென உயர்ந்தவர். 'முன்னேற வேண்டும்' என்ற உறுதியும், கடும் உழைப்பும் அவர் வாழ்க்கையை வெற்றிகரமாக அமைத்துத் தந்துள்ளன.

ஒரே ஒரு தேன் கூட்டைக் கடனுக்கு வாங்கி, படிப்படியாக அதனை 800 சொந்தத் தேன் கூடுகளாக வளர்த்து, மூன்று மாத சீசன் ஒன்றில் 18 கிலோ தேன் எடுக்கும் வேலாயுதனின் சுறுசுறுப்பைத் தேனீக்களுடன் தான் ஒப்பிட முடியும்!

\- குமரன்

(விவசாயத் துறையில் இதைப் போன்ற சாதனை எதையேனும் நீங்கள் செய்திருந்தால், அல்லது உங்கள் நண்பர் செய்திருந்தால் அதுபற்றி எங்களுக்கு எழுதலாமே. படித்துப் பார்த்துவிட்டு சிறந்த விவசாய சாதனையை நேரில் காணவும் கட்டுரை எழுதவும் எமது நிருபர்களை அனுப்பி வைக்கிறோம். சாதனை விவரமும் சாதனையாளரின் பெயரும் படமும் கல்கியில் வெளியிடுவதே லட்ச ரூபாய் பரிசுக்குச் சமானமல்லவா! - ஆசிரியர்)

# "எங்க பொண்ணுன்னா எங்களுக்கு உயிர்!"

**ஊ**ட்டியில் "அன்பேவா" படத்தின் ஷூட்டிங், நடந்து கொண்டிருந்தபோது, மாலை படப்பிடிப்பு முடிந்து, அனைவரும் புறப்பட்டுக் கொண்டிருந்தனர். டைரக்டர் திருலோக்சந்தர், கேமரா மேன் மாருதி ராவிடம், "ஐந்து நிமிடம் டைம்; மறுபடி கேமராவை செட்பண்ண முடியுமா? ஒரு அற்புதமான காட்சியைப் படம் பிடிக்க வேண்டும்" என்றார். மாருதிராவ், மடமடவென கேமராவைத் தயார் செய்ய, சூரியன் தொடுவானத்தில் செந்நிறக் கோளமாய் இறங்கிக் கொண்டிருந்தது. படத்தின் ஹீரோவான எம்.ஜி.ஆரையும், ஹீரோயின் சரோஜா தேவியையும் அழைத்து, "நீங்கள் இருவரும் கையைக் கோத்தபடி, மறையும் சூரியனை நோக்கி நடந்து கொண்டே சிறிது தூரம் போய், பின், கைகளை விட்டு விட்டு, இருவரும் இரண்டு பக்கமாய் விலகிச் செல்லுங்கள்" என்று திருலோக் சொன்னார். எம்.ஜி.ஆரும், சரோஜா தேவியும் அப்படியே செய்ய சூரியன் மறைந்தது. எதற்காக இந்தக் காட்சியை எடுக்கிறார் என்று யூனிட்டில் பலரும் குழம்பினார்கள். படம் ரிலீசானபோது தெரிந்தது, அந்தக்காட்சி, ஒரு பாடலில் எத்தனை பொருத்தமாய் அமைக்கப்பட்டிருந்தது என்று.

அற்புதமான அந்த சில்-அவுட் காட்சியை இப்போது தொலைக்காட்சியிலும், தமிழகம் முழுக்கத் தியேட்டர்களிலும் மக்கள் கண்டு ரசிக்கிறார்கள்! எதில்? பெண் உரிமை பற்றிச் சொல்லும் பாடல் நிகழ்ச்சியில்.

ஏவி.எம். தயாரிப்பான இதில் எம்.ஜி.ஆர், சரோஜாதேவி தவிர ரேவதி, கௌதமி, குஷ்பூ, பிரபு, எஸ்.பி.பி., வைரமுத்து, வாணிஜெயராம் போன்றவர்களும் தோன்றுகிறார்கள். அன்பேவா தவிர, மிஸ்டர் பாரத், தர்மதேவதை, புதுமைப் பெண், அஸ்வினி போன்ற படங்களிலிருந்தும் கிளிப்பிங்குகள் இந்தப் பாடல் காட்சியில் இயல்பாகத் தோன்றும்படி சேர்க்கப்பட்டுள்ளன.

"எத்தனை யுகங்கள், எத்தனை யுகங்கள், எங்கே போயின எங்கள் முகங்கள்?" பாடலின் அழுத்தமான வரிகளை எழுதியுள்ள வைரமுத்து சொல்கிறார் :



"பெண்களுக்கு விடுதலை என்பது அவர்கள் வேலைக்குப் போவதல்ல; வேலைக்குப் போகிற பெண்கள் வீட்டுச் சிறையிலிருந்து வெளியே போய், இன்னொரு திறந்த வெளிச் சிறைச்சாலையில் இருக்கிறார்கள். பெண்ணை மனித நிலைக்கு அப்பால் துதிப்பது; இல்லையென்றால் மனித நிலைக்குக் கீழே மிதிப்பது; இந்த இரண்டும்தான் நீண்ட காலமாய் இங்கே நிலவி வந்திருக்கிறது. என்னுடைய கருத்து, பெண்ணுக்குச் சூடம் காட்டவும் வேண்டாம்; அவர்களுக்குச் சூடுபோடவும் வேண்டாம். பெண் மனித ராசியாய் மதிக்கப் பட்டாலே போதும். இந்தப் பாட்டிலே ஒரு நெருப்பு இருக்கிறது என்று நீங்கள் நினைத்தால், அதற்கு என் மனதுக்குள்ளே நீண்ட நாட்களாய்க் கனன்ற ஒரு பொறிதான் காரணம். இதுபோன்ற சமூகத் தேவைகளைத் தீர்த்து வைப்பதற்கே என் பாடல் கள் பயன்பட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். பார்ப்போம்!"

"பெண் சிசுவைத் தாழ்வாய் நினைக்கும் போக்கு மாற வேண்டும்; 'குழந்தை ஆணாய் இருந்தால் என்ன? பெண்ணாய் இருந்தால் என்ன?' என்ற மனப்பக்குவம் மக்களிடையே வளர வேண்டும் என்பதற்காக 'அக்னி' அமைப்பின் சார்பாகத் திட்டம் தீட்டி, ஏவி.எம். சரவணன் ஒத்துழைப்புடன் நிறைவேற்றி வைத்தோம். நிச்சயமாய் மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை இந்தப் பாடலும் சரி, மற்ற துண்டுப் படங்களும் சரி ஏற்படுத்தும்" என்கிறார் எழுத்தாளர் சிவசங்கரி.

நடிகர், டைரக்டர் பார்த்திபனும், முன்னாள் நடிகை சீதாவும் தம் பெண் குழந்தை அபிநயாவுடன் தோன்றி, "எங்க பொண்ணுன்னா எங்களுக்கு உயிர்! உங்களுக்கு?" என்று கேட்கும் துண்டுப் படம் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது.

ஒரு நடிகரும், நடிகையும் ஒரு குழந்தையுடன், தோன்றி, 'பெண் குழந்தையானால் என்ன?' என்று கேட்பதைவிட, ஒரு பிரபலமான நிஜ நட்சத்திர தம்பதியே குழந்தையுடன் தோன்றினால் பொருத்தமாய் இருக்கும் என்று நினைத்துப் பார்த்திபனை அணுகியது ஏவி.எம் நிறுவனம். திருமணத்துக்குப் பின் நடிப்பதை நிறுத்திவிட்ட சீதாவை மறுபடி இதில் நடிக்கச் சம்மதிக்க வைத்தவர்கள் சிவசங்கரியும், பார்த்திபனும்.

"நாங்க ரெண்டு பேருமே, பிரபலமாய் இருக்கலாம். ஆனால் இப்படிப்பட்ட ஒரு நல்ல விஷயத்தில் நாங்களும் பங்கு பெற, ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தது எங்க பெண் அபிநயாதானே?" என்று சந்தோஷமாய்க் கேட்டுக் குழந்தையின் கன்னத்தை மாறி மாறிக் கொஞ்சலாகத் தட்டுகிறார்கள் சீதாவும் பார்த்திபனும்.

– மௌலஷ்மி



ஒரே மாதிரியான கதைகளைப் பார்த்துப் பார்த்து நமக்கு அலுத்தாலும் அதே மாதிரியான கதைகளையே திரும்பத் திரும்ப எடுப்பதற்குத் தயாரிப்பாளர்களுக்கு அலுக்கவில்லை. கடந்த முறை பார்த்த படத்தில், பில்லி - சூன்ய - ஏவல்

# தமிழ் பொண்ணு

(தமிழ்த் திரைப்பட இலக்கணப்படி 'ப்' இல்லை)

வேலை காதலுக்குக் குறுக்கே வந்தால்.... இதில் குறுக்கிடுவது தாலி 'செண்டிமெண்ட்' என்பதுதான் வித்தியாசம்.

அது என்ன தாலி 'செண்டிமெண்ட்' என்கிறீர்களா?

மகளின் ஜாதகத்தைப் பைக்குள் போட்டுக் கொண்டு மாப்பிள்ளை தேடி லோ லோவென்று அலைந்த அனுபவம் உங்களுக்கு உண்டா? அப்படியென்றால் செவ்வாய்தோஷம், களத்திரதோஷம் போன்ற சொற்கள் உங்களுக்குப் பரிச்சயப்பட்டிருக்கும். இந்தப்படத்தின் அச்சாணியாக இடம் பெற்றிருப்பது 'தாலி தோஷம்'.

அந்த மாங்கல்ய தோஷ நிவர்த்திக்காக வாழை மரத்துக்குத் தாலி கட்டி, அதனை வெட்டிச் சாய்த்து விட்டு, அதற்கடுத்தாற் போல மணப் பெண் கழுத்தில் தாலி கட்டுவார்கள்.

யார் அதைக் கட்டுவது என்பதில்தான் பொதுவான கருத்திலிருந்து கதாசிரியர் வேறுபடுகிறார். படத்தில் காண்பித்திருப்பது போல மணமகனே கட்ட வேண்டும் என்றால் அவனுக்குத்தான் 'களத்திர தோஷம்' இருக்க வேண்டும். (அவளுக்குத் தாலி தோஷம் என்றால் அப்படிக் கட்ட வேண்டியது அவனல்ல. கல்யாணத்தை நடத்திவைக்கும் ஐயர்தான் அப்படிச் செய்வார். இந்தத் தாலி தோஷ விவகாரம் மண்டையைக் குடைய, விஷயமறிந்த ஒருவரைத் தேடிப் போய் விவரம் விசாரித்த போது, "ஒரு தமிழ் சினிமாக் கதையையா இவ்வளவு சீரியஸாக எடுத்துக் கொண்டு விளக்கம் கேட்க இவ்வளவு தூரம் வந்தீர்கள்?" என்று கேட்டுச் சிரித்தார்.)

கூடவே, டபுள் தோஷ நிவர்த்தியாகச் சிறுமி ஒருத்திக்கும் அவன் தாலி கட்டுகிறான். (இல்லாத இப்படியொரு தோஷ நிவர்த்தி யாருடைய கற்பனையோ?) அந்தச் சிறுமி வளர்ந்து, பெரியவளாகி, அவளுக்குத் திருமணம் நிச்சயமாகும் தருணம் வரை இதனைப் படம் பார்ப்பவர்களுக்கு சஸ்பென்ஸாக வைத்திருந்து, திடுமென அந்தத் தருணத்தில் அவன் குறுக்கே நின்று, "அவள் என் பெண்டாட்டி. நான் ஏற்கெனவே அவளுக்குத் தாலி கட்டிட்டேன்" என்று கொக்கரிக்க (அதிர்ச்சி தரும் திருப்பம்?) அதைத் தொடர்வது இடைவேளை.

மற்றபடி... ஒரே மாதிரியான கிராமம், இரு தரப்பினரிடையே ஒரே மாதிரியான விரோதம், அதை மீறி இரு உள்ளங்களின் இணைப்பு... அதற்குக் குறுக்கே... கதையை நீங்களே பூர்த்தி செய்து கொள்ளுங்கள், மைனஸ் அம்மன் கோவில் வேப்பிலை நடனம்.

மூட நம்பிக்கைகளை உடைத்தெறிந்து முற்போக்குக் கருத்துக்களை ஏற்க வேண்டும் என்கிறார்களா, அல்லது அவை மூட நம்பிக்கைகள் அல்ல, நமது "பண்பாடு" என்கிறார்களா... புரியவில்லை!

பிய்த்து உதறியிருப்பவர்கள் மனோரமாவும் ராதிகாவும். துணைக்குக் கம்பீர விஜயகுமார் + தேவாவின் இசை.

இவர்களைத் தவிர்த்தால்.... ப்ச்.

– சி. ஆர். கே.

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி ஏப்ரல் 16, 1942

### புது வருஷம்

சுற்றிலும் கிளம்பும் ஜப்பான் வெடிகளின் சப்தத்துக்கிடையே, தமிழ் நாட்டாருக்குப் புதிய வருஷம் பிறந்திருக்கிறது.

சர்க்கார் விடவில்லை. "நிஜமான பயம் வந்து விட்டது; எழுமின்; விழிமின்; விடுமின் சவாரி!" என்று சென்ற வாரத்தில் எச்சரிக்கை விட்டார்கள். ஹைக் கோர்ட், ஸெக்ரடேரியட் முதலிய தங்களுடைய சொந்த ஆபீஸுகளையும் வெளியூர்களுக்குக் கிளப்பினார்கள். இதனால் நகரில் ஏற்பட்ட பீதியையும், பலவகை வதந்திகளையும் சொல்லி சாத்தியமில்லை.

ரயில்வே ஸ்டேஷன்களில் கூட்டம் சொல்லி முடியாது. மொத்தத்தில், சென்னை நகர் வேறு எதில் பின் வாங்கினாலும் "பின் வாங்கும் திட்டத்தில் பின் வாங்கியது" என்று மட்டும் யாரும் அதன் மேல் குற்றம் சொல்வதற்கில்லை. இந்தப் பெருமையையாவது சென்னைக்கு அளித்த மகானுபாவர்களுக்கு நமது புது வருஷ வாழ்த்துக்களைச் சமர்ப்பிக்கிறோம்.

*- என்னசேதி*

### வந்தேன், பார்த்தேன், தோற்றேன்!

ஸீஸர் என்னும் ரோம சக்கரவர்த்தி சொன்னானாம் :- '''வந்தேன்; பார்த்தேன்; வென்றேன்!'' என்று.

இந்தியாவுக்கு பிரிட்டிஷ் தூதராய் வந்த ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ், "வந்தேன்; பார்த்தேன்; தோற்றேன்!" என்கிறார்.

திரும்பிப் போகும்போது ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ், "நான் வருவதற்கு முன்னால் இந்தியாவில் எந்த நிலைமை இருந்ததோ அதே நிலைமைக்குத்தான் திரும்புகிறோம்" என்று சொல்லி விட்டுப் போனார்.

இந்தியாவைப் பொறுத்த வரையில், கிரிப்ஸ் தூதுக்கு முன்னால் எந்த நிலைமை இருந்ததோ அதே நிலைமைதான் இருக்கிறது. ஆனால், பிரிட்டனுடைய நிலைமை கிரிப்ஸ் தோல்வியால் முன்னை விடப் படுமோசமாகிவிட்டது.

*- தலையங்கத்தில் ஒரு பகுதி*

### இளைஞர்கள் மனம் வைத்தால்.....

தென்னாட்டின் பிரதான க்ஷேத்திரங்களில் ஒன்றான திருவண்ணாமலைக்கு பிப்ரவரி மீ 28உ நான் போயிருந்தேன்.

இந்த ஆலயத்தில் எந்த மூலையை எடுத்துக் கொண்டாலும், இருபதினாயிரம் பேர் உட்காரலாம்! மண்டபங்கள், பிராகாரங்கள் எல்லாவற்றிலும் குறைந்தது ஒரு லட்சம் பேர் வசதியாக உட்கார்ந்து, வெளி உலகத்தை மறந்து, ஆத்மசாந்தியும் மனோதிடமும் தரக்கூடிய திவ்ய காலட்சேபங்களைக் கேட்டு ஆனந்திக்கலாம்.



ஆலயத்தில் இப்போது, எங்கே பார்த்தாலும், "அசுத்தம் செய்கிறவர்கள் பிராஸிக்யூட் செய்யப்படுவார்கள்" "மலஜலம் கழிப்பவர்கள் தண்டனைக்குள்ளாவார்கள்" என்பது போன்ற நோட்டீஸ்கள் காணப்படுகின்றன. என்ன பயங்கரம்? இம்மாதிரி அசுத்த வழக்கங்கள் இருந்து வருவதினால்தானே மேற்படி நோட்டீஸுகள் போட வேண்டிய அவசியம் ஏற்பட்டது? இந்த எச்சரிக்கைகள் கூட அவ்வளவாகப் பயன்படவில்லையென்றும் காணப்படுகிறதே!

நமது முன்னோர்களின் மகத்தான உள்ளத்தில் உதயமாகி, நாடெங்கும் கம்பீரமாய்க் காட்சியளிக்கும் திருக்கோவில்களை நாம் எப்படி நாசம் செய்து விட்டோம்?

ஆனால், நல்ல வேளையாக, இன்னும் அடியோடு நாசமாகிவிடவில்லை. ஆலயங்கள் மீண்டும் பழைய மகிமையை அடையச் செய்யலாமென்னும் ஆசைக்கு இன்னமும் இடம் இருக்கிறது. இளம் பிராயத்தினர் மனது வைத்தால் அது நடந்து விடும்.

வாலிபர்களே! யுவதிகளே! அகத் தூய்மையும் புறத் தூய்மையும் அடையுங்கள். பக்தியும் சக்தியும் பெறுங்கள். நமது மூதாதைகளின் பிதுரார்ஜித சொத்தை ஏற்றுக் கொள்ள முன்வாருங்கள். நமது முன்னோர்கள் இதையெல்லாம் நமக்காகவே தான் செய்து கொடுத்து விட்டுப் போனார்கள். நம்முடைய தேகம், ஆத்மா எல்லாம்

அவர்களிடமிருந்தே வந்தவை என்பதை ஒரு நாளும் மறவாதீர்கள்.

- சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரியார்: ''பிராகாரத்தில் கண்ட பகற் கனவு'' கட்டுரையிலிருந்து.

## புதிய கட்டிடம்

''கல்கி'' காரியாலயம் புதிய கட்டிடத்துக்கு மாறியபோது, கிரகப் பிரவேசத்துக்கு நேயர்களை அழைக்க சௌகரியமில்லாமல் போய்விட்டது. காரணம் நேயர்கள் லக்ஷக் கணக்கானவர்கள் ஆனதுதான். அதனால் நமக்கு உண்டான மனக்குறையைத் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு, புதிய காரியாலயத்தின் படத்தை இந்த இதழ் மேலட்டையில் வெளியிட்டிருக்கிறோம். புதிய கட்டிடத்தில், ''கல்கி'' தமிழ் மக்களின் அபிமானத்தையும் ஆதரவையும் மேலும் மேலும் பெற்று, ''தமிழர்களின் சொந்தப் பத்திரிகை'' என்னும் பெயருக்குத் தகுதியாக நாளுக்கு நாள் சிறந்தோங்க வேண்டுமென்று தமிழ்க் கடவுளாகிய முருகனைப் பிரார்த்திக்கிறோம்.




''சுத்தி நில்லாதே போ - பகையே
துள்ளி வருகுது வேல்!''

- அட்டைப்பட விளக்கம்

## இந்திரா - பிரோஸ் திருமணம்

பண்டித ஜவாஹர்லால் நேருவின் செல்வப் புதல்வி ஸ்ரீமதி இந்திரா பிரிய தர்ஷினிக்கும், பார்ஸி இளைஞர் ஸ்ரீ பிரோஸ் காந்திக்கும் சென்ற மார்ச் மீ 26வ அலகாபாத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மகாத்மா காந்தி, சியாங்-காய்-ஷேக் முதலிய உலகப் பிரமுகர்களின் வாழ்த்துக்களுடன், தமிழ் மக்களின் சார்பாகக் ''கல்கி''யின் வாழ்த்துக்களையும் தம்பதிகள் பெற்றார்கள்.



- சிறப்பு அனுபந்தம் பகுதியிலிருந்து

## டி.கே.ஸியின் கவிதைப் பண்பு

டி.கே.ஸி. கம்பன் பாடல்களை - ஏன், எல்லாக் கவிதைகளையுந்தான் - படித்துக் காட்டும் விதமே ஒரு தனி மாதிரி, அவரிடம் கேட்ட பிறகுதான், பாடல்களை எப்படிப் படிக்க வேண்டுமென்று தெரிந்தது. அம் மாதிரி படித்தால் தான் கவிதைகளின் ஓசை இன்பத்தைப் பூரணமாய் அநுபவிக்க முடியும் என்றும் கண்டேன்.



இன்னும், உண்மையான கம்பன் பாட்டுக்களிலும் எங்கேயாவது ஒரு இடத்தில் அழகுக் குறைவோ, பொருள் சிதைவோ இருப்பதுண்டு. ஒரு சிறு திருத்தம் செய்து விட்டால் அதன் அழகு பரிபூரணமாகி விடும். அப்படிப்பட்ட திருத்தங்களை எல்லாருமே செய்ய முடியாது. வாழ்நாளெல்லாம் கவிதை ஆராய்ச்சியில் - முக்கியமாகக் கம்பன் ஆராய்ச்சியில் - செலவிட்ட ஒருவர்தான் அம்மாதிரி திருத்தங்களைச் செய்ய முடியும்.

அந்தகைய தகுதியை நான் அறிந்தவர்களுக்குள்ளே டி.கே.ஸி. ஒருவரிடந்தான் கண்டேன். கம்பன் பாட்டில் டி.கே.ஸி. ஒரு திருத்தம் செய்தாரானால், பாட்டின் அழகையும் பொருள் வளத்தையும் அது நிச்சயம் கிருதிப்படுத்துவதாகவே இருக்கும். ''கம்பன் இப்படித்தான் பாடியிருக்க வேண்டும்'' என்று தைரியமாகச் சொல்லும்படி இருக்கும். டி.கே.ஸி. ஊகத்தினால் செய்த சில திருத்தங்களுக்கு, பின்னால் கிடைத்த ஓலைச் சுவடிகளில் ஆதாரம் கிடைத்திருக்கின்றன என்றும் நண்பர்களின் மூலம் தெரிய வந்தது.

- கம்பனும் நானும் : ரா.கி.

## பிடிவாதக்காரன்!

பிச்சைக்காரன் : ஐயா, பிச்சை போடுங்க சாமி!

வீட்டுக்காரர் : போ அப்பா! இங்கே ஒன்றும் கிடையாது!

பிச்சைக்காரன் : நாலு நாளாய்ப் பட்டினி, சாமி! கொஞ்சம் தயவு பண்ணுங்க!

வீட்டுக்காரர் : போ என்று சொன்னால் போக மாட்டாய்? உனக்கு ஒன்றும் கிடையாது, போ! சொன்ன பேச்சக் கேட்காத பிடிவாதக்காரனுக்கு இந்த வீட்டில் பிச்சை போடுவது வழக்கமில்லை!



- காலக்ஷேபம்

* 'ஜெ' ராகம்!



* சோலங்கித்தனம்



* இந்தியாவில் குற்றம்?



● தா. சிந்துகுமார், திருவட்டார்.

? ***சமீபத்தில் நீங்கள் வியந்து பாராட்டிய அரசியல் சாணக்கியத்தனம்?***

! சோலங்கித்தனத்தைச் சமாளித்த நரசிம்மத்தனம்.

● கே. பாரதி, மணலூர்ப்பேட்டை.

? ***மதுரையில் ஒரு கலெக்டருக்கே சிறைத் தண்டனை விதித்திருப்பது குறித்து?***

! அதிகாரிகளுக்கு மெத்தனமும் ஆணவமும் உதவாது; பொறுப்புணர்வோடு நடந்து கொள்ள வேண்டும் என்பதை உணர்த்தும் நிகழ்ச்சி. அதிலும் நீதிமன்றத்தை எதிர்த்துக் கொள்ளலாமா!

● இரா. பாலு, நெல்லிக்குப்பம்.

? ***எழுத்தாளர்களுக்குச் சினிமா ஒத்து வருமா?***

! சமரசங்களுக்குத் தயாராக இருந்தால் ஓ.கே.!

● வி. பரமசிவம், மதுரை.

? ***மைக்டைசன் இந்தியாவில் இந்தக் குற்றம் புரிந்திருந்தால் இந்தத் தண்டனை பெற்றிருப்பாரா?***

! டெஸிரி வாஷிங்டனைப் போல் துணிந்து இந்தியப் பெண் வழக்குத் தொடுத்தால் இதே தண்டனை இல்லாவிட்டாலும் தண்டனை கிடைக்க நிறையவே வாய்ப்புண்டு. சமீபத்தில் கூட பம்பாய் கஸ்டம்ஸ் கலெக்டர் தமக்குக் கீழ் பணியாற்றும் பெண்ணிடம் தவறாக நடந்து கொண்டதாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைதாகியுள்ளாரே!

● எஸ். இராஜசேகரன், கொளப்பாடு.

? ***''இந்தப் பெண் எழுத்தாளர்களின் பேனா இங்கு எதையும் சாதித்து விடவில்லை'' என்கிறாரே சரஸ்வதி ராம்நாத்?***

! சரஸ்வதி ராம்நாத்தின் பேனா உள்பட வா! தமிழ்ப் பெண் எழுத்தாளர்கள் ஷோபா டேயைப் பின்பற்றி 'சாதனை' புரியாமல் இருப்பதே சாதனைதான்! ராஜம் கிருஷ்ணனும், சூடாமணியும், சிவசங்கரியும், வாஸந்தியும் ஒன்றும் சாதிக்கவில்லை என்பது ஏற்கத்தக்க விமர்சனம் அல்ல.

● எம். பிரபு, குமராட்சி.

? ***பள்ளி ஆண்டு விழாக்களில் சினிமா பாட்டுக்களைப் போட்டு மாணவ - மாணவிகளை ஆட வைக்கிறார்களே, ஆசிரியர்கள், நியாயமா?***

! அநியாயம்தான். நிகழ்ந்து வரும் கலாசாரச் சீரழிவின் ஓர் அங்கமே என்பதால் வியப்பளிக்காத அநியாயம்!

● கே. ஆர். விஜயா, கோவை.

? ***'ஜெ'யைப் 'பெண் ஹிட்லர்' என்று வர்ணிப்பது சரியா?***

! ரொம்பத் தப்பு. அதற்காக கப்புவை காங்கிரஸிலிருந்து வெளியேற்றிய வாழப்பாடி, எதிர் அணியினரை ''சகுனிகள்'' என்றும் பீட்டர் அல்ஃபோன்ஸைக் ''கோமாளி'' என்றும் வர்ணிப்பது எவ்வளவு தப்போ, அத்தனை தப்பு!



* ''மிஞ்சியது தாடி!''

## மைக் டைசன் இந்தியாவில் குற்றம் புரிந்திருந்தால்?

* குழப்பமோ குழப்பம்!



● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? ***புதிய ராகத்தின் பெயர் முதலமைச்சரின் பெயராக இருக்க வேண்டும் என்று குன்னக்குடி விரும்பியதன் காரணம் என்ன?***

! பச்சைக் குத்திக் கொள்ளும் அளவுக்குப் போக விரும்பாதது ஒரு காரணமாய் இருக்கலாம்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? ''சட்டசபைக் குறிப்புக்களை அ.தி.மு.க. அரசு மாற்றினால் தி. மு. க. ஆட்சிக்கு வரும் போது அ. தி. மு. க. ஆட்சியில் இருந்ததற்கான அடையாளமே இல்லாத வகையில் சபைக் குறிப்பேடு திருத்தப் படும்'' என்று தமிழ்க் குடிமகன் கூறியுள்ளாரே?

! ஆக, நல்ல மரபுகளை இருதரப்பிலும் எதிர் பார்க்க முடியாது என்பது புரிகிறது.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
மா. பழனிச்சாமி,
28, ஸ்டேட் பேங்க் ரோடு,
கோவை - 641 018.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? ''உலக கிரிக்கெட் கோப்பை ஆசியாவுக்கே சொந்தம்'' என்று இம்ரான்கான் கூறியுள்ளது பற்றி?

! பெருந்தன்மையுடன் பேச வேண்டும் என்று சொல்கிறார். அவர் வரை அது சரி. அதை அப்படியே நிஜமென்று எடுத்துக் கொண்டு நம்மவர் மெத்தனத்தில் மேலும் உயர்ந்து விடப் போகிறார்கள்!

☛ நரசிம்மருத்தனம்



☛ [illegible]



☛ ''ஆசியாவுக்கே சொந்தம்!''



☛ [illegible]



● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

? ''என்னுடைய அரசியல் வாழ்க்கையில் எனக்கு மிஞ்சியது தாடி மட்டுமே'' என்று சிவாஜி வருத்தம் தெரிவித்துள்ளாரே?

! 'நான் அரசியலுக்கே லாயக்கற்றவன்' என்று இவருடைய தலைவர் வி. பி. சிங் சொன்னதை விட இவர் கூறியது தேவலாம். நூல்விழுண்டு கவிதைத்தனமாவது அதில் ஒட்டிக் கொண்டிருக் கிறது!

● மா. பழனிச்சாமி, கோவை ❑

? கர்நாடகத்துக்குக் கூடுதல் தண்ணீர் வேண்டும் என்ற கோரிக்கை மனுவை நடுவர் மன்றம் நிராகரித்தது பற்றி...?

! 'இடைக்காலத் தீர்ப்பை மதித்து, அதில் கூறியுள்ளபடி தமிழகத்துக்குத் தண்ணீர் கொடுத்தே ஆக வேண்டும்' என்று கூறி, கர்நாடக அரசின் தலையில் குட்டி, அதன் மனுவை நிராக ரித்த நடுவர் மன்றம், 'மழை குறையும் ஆண்டுகளில் கஷ் டத்தை இருதரப்பிலும் பங்கு போட்டுக் கொள்ளலாம்; பரஸ்பரம் பேசித் தீர்த்துக் கொள்ளலாம்' என்றும் கூறிக் குட்டை குழப்பி விட்டதே!

● எஸ். பாலசாகுல், சிதம்பரம்.

? நமது முதல்வர், 'விடுதலைப் புலிகளை அடக்கி விட்டேன்' என்று ஒருபுறமும் மறுபுறம், 'புலிகளினால் எனக்கு ஆபத்து' என்றும் கூறி, மக்களைக் குழப்புவது ஏன்?

! 'விடுதலைப் புலிகளுக்கு உதவிய பெரிய அரசியல் தலைவர்களைப் பிடிக்க சி. பி. ஐ. தயங்குகிறது' என்று ஒருபுறமும், 'ஆனால் அப்படி அவர்கள் உதவினார்கள் என்பதற்கான ஆதாரம் ஏதும் என்னிடம் இல்லை' என்று மறுபுறமும் கூறி, முதல்வர் குழப்புவதைப் புரிந்து கொள்ள முடியும் என்றால் உங்கள் கேள்விக்கும் விடை கிடைத்து விடும்!

● எஸ். சியாமளா ஈசுவரன், தேவூர்மேட்டுக்கடை.

? ஏப்ரல் 1ல் ஏமாந்தீர்களா?

! ஹிட்டாச்சி என்ற ஜப்பானிய நிறுவனத்துடன் இணைந்து, இங்குள்ள பி. எச். இ. எல். மின்சார ரயில் இஞ்ஜின்களைத் தயாரிக்க முடியாமல், அத் திட்டத்தை ஒதுக்கி, ஏ.பி.பி. என்ற ஸ்விஸ் நிறுவனத்துக்கு ஆர்டர் தரப்பட்டுள்ளதைப் பார்க்க, இங்கு ஒவ்வொரு இந்தியனுமே ஏப்ரல் முட்டாளாக்கப்பட்டிருப்பதாகத் தான் தோன்றுகிறது!

**நீங்கள் கேட்டவை - தராசு**

## கல்கத்தா கடிதம் :

# தலைப்பு காரணமாகக் "கொலை" செய்யப்பட்ட சினிமா!

### தசாவதானி சத்யஜித் ராய்

ஆஸ்காரும் பாரத ரத்னாவும் பெற்ற சத்தியஜித் ராய் சிறந்த திரைப்பட இயக்குனர் என்பதை யாவரும் அறிவர். (இந்த ஆண்டு சிறந்த திரைப்படம் மற்றும் சிறந்த இயக்குனர் விருதையும் பெற்றிருக்கிறார்) 'பத்தேர் பாஞ்சாலி' மூலம் இந்தியத் திரைப் படத் துறையில் ஒரு திருப்பத்தை ஏற்படுத்திய அவர் திரைப்பட இயக்குனர் மட்டுமல்ல; எழுத்தாளர், திரைக் கதை, வசன கர்த்தா; இசையமைப்பாளர், ஆர்ட் டைரக்டர், ஓவியர், ஒலிப்பதிவாளருங்கூட.

சத்தியஜித் ராய் தம் புத்தகங்களுக்கு மட்டுமின்றி பிறருடைய புத்தகங்களுக்கும் சித்திரங்கள் வரைந்து தருகிறார். சிறுவர்களுக்காக அவர் படைத்துள்ள துப்பறியும் நிபுணர் ஃபேலுதாவும் விஞ்ஞானி புரொபெசர் சங்குவும் சிறுவர்களுக்கு மட்டுமின்றிப் பெரியவர்களுக்குங் கூடப் பிரியமானவர்கள்.

இலக்கிய, கலைப் பரம்பரையில் தோன்றியவர் சத்தியஜித் ராய். அவருடைய தாத்தா உபேந்திர கிஷோர் ராய் சௌதுரியும், தந்தை சுகுமார் ராயும் குழந்தை இலக்கியம் படைத்தவர்கள். உபேந்திர கிஷோர் தொடங்கிய குழந்தைப் பத்திரிகை 'சந்தேஷ்' சுகுமார் ராயால் தொடரப்பட்டுப் பிறகு சிறிது காலம் நின்று போயிருந்தது. சத்தியஜித் ராய் அதை மறுபடி வெளியிடத் தொடங்கினார். அது இப்போதும் வெளிவந்து கொண்டிருக்கிறது.



### அறிவும் அபத்தமும்!

மேற்கு வங்க எதிர்க் கட்சித் தலைவர் சித்தார்த்த சங்கர் ராய் அண்மையில் பத்திரிகை நிருபர்களிடம் குறைப்பட்டுக் கொண்டார். "ஜோதிபாசு அபத்தமாகப் பேசித் தேர்தலில் ஜெயித்து விடுகிறார். நான் புத்திசாலித்தனமாகப் பேசியும் தேர்தலில் தோற்று விடுகிறேன்!" ஆனால், மக்கள் எல்லாம் இவர் புத்திசாலித்தனமாகப் பேசுகிறார் என்று ஒப்புக் கொள்ள வேண்டும்!

### தலைப்பே பிரச்னை!

மத்திய மந்திரி அஜித் குமார் பஞ்சாவின் அதிகாரத்துக்குட்பட்ட தூரதர்ஷனில் காட்டப்படவிருந்த ஓர் இந்திப் படம் அதன் தலைப்பு காரணமாக ஒளிபரப்பப்படவில்லை. அதன் தலைப்பு, 'கொலைகாரப் பஞ்சா!' (இந்தியில் 'பஞ்சா' என்றால் 'கைப்பிடி' என்று பொருள்.)

– எஸ். கே. எம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா : 2344157; டைரக்டர் : 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் ரூ. 200/; விமானத் தபால் ரூ. 525/-.

# மல்லிகைப் பூ

## காலம் இது

மல்லிகைப் பூ புனிதத் தனமை தந்து சமநிலையும் அளிக்கும் நறுமணத்தை முகர்வது அவசியம். இதனால் பூமியில் மறைந்து உள்ள அதன் சாரம் இரகசிய உண்மை நாம் கிரகித்துக் கொள்ள முடிகிறது.

—சிவமஹா புராணம்

---

மல்லிகைப் பூவினால் அர்ச்சனை செய்தால் எல்லா பாவங்களிலிருந்தும் விடுபடுவான்.

மலர்களை மாலைகளாக தொடுத்து பகவானுக்கு அர்ப்பணம் செய்வது மலர்களால் அர்ச்சிப்பதைவிட எண்ணற்ற மடங்கு பலன் தரும். ஒருவன் தன் சொந்த தோட்டத்திலிருந்து மலர்களை வந்து பகவானுக்கு அர்ப்பணித்தால் அடையும் பலன்களைவிட காட்டிலிருந்து சேகரித்த பூக்களால் அர்ச்சிப்பது மும்மடங்கு பலனைக் காட்டும்.

அக்னிப் புராணம்

---

அத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---



திருமண வைபவங்களுக்கு : சீர் முறுக்கு, சீர்முள்ளுத் தேன்குழல், தேன்குழல், சீர் அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத்தேங்காய் வகைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2.வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு
சென்னை-20
போன் : 412557.

